23.04.89

15 - 4

ஸ்ரீ:

# வைணவக் களஞ்சியம்



அமைப்பு
சிந்தாமணிச் செம்மல், ஸ்ரீ வைணவச் செல்வம்
புலவர் **மு. இராமசாமி,** எம். ஏ., பி. எட்.,
இராசிபுரம்

**திருவரங்கப் பதிப்பகம்**
7, எல்லப்ப செட்டியார் குடியிருப்பு
இராசிபுரம்–637 408.






ஸ்ரீ:

# திருவரங்கத்தின் பெருமை

ஆராத அருளமுதம் பொதிந்த கோயில்
அம்புயத்தோன் அயோத்திமன்னற்கு அளித்த கோயில்
தோலாத தனிவீரன் தொழுத கோயில்
துணையான வீடணற்குத் துணையாம் கோயில்
சேராத பயன்அனைத்தும் சேர்க்கும் கோயில்
செழுமறையின் முதலெழுத்துச் சேர்ந்த கோயில்
தீராத வினையனைத்தும் தீர்க்கும் கோயில்
திருவரங்கம் எனத்திகழும் கோயில் தானே.

— வேதாந்த தேசிகர்



## பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| 1 | அறிமுகம் | 1 |
| 2 | இரண்டாம் பதிப்பின் முன்னுரை | 3 |
| 3 | அங்கங்களின் பயன் | 5 |
| 4 | நாராயண கவசம் | 8 |
| 5 | பாசுரப்படி பாகவதம் | 24 |
| 6 | திவ்யப்பிரபந்தப்பாசுரப்படிஇராமாயணம் | 45 |
| 7 | திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ரகசியம் | 52 |
| 8 | சின்னியம்மாள் ரகசியம் | 135 |
| 9 | இந்து நாளிதழில் வந்த மதிப்புரை | 138 |
| 10 | ,, ,, தமிழாக்கம் | 140 |

ஸ்ரீ:

அரங்கனை எண்ணி எண்ணி
அகமெலாம் உருகும் என்தாய்
பரம்பொருள் தன்னை நெஞ்சில்
பரிவுடன் இருத்த லாலே
தரங்கப்பாற் கடலே போலத்
தயங்குவார்; அவர்தம் அன்பாய்
நிரந்தரம் பொலிக இந்நூல்
நினைப்பவர் உயர்க என்றும்.

*தாயார்*

**மு. அம்மணி அம்மாள்**

*மாராடி*, திருச்சி மாவட்டம்

மு. அம்மணி அம்மாள்

ஸ்ரீ:



மு. அம்மணி அம்மாள்

ஸ்ரீ:

# அறிமுகம்

'அகல கில்லேன் இறையும்'என்று
அலர்மேல் மங்கை உறைமார்பா!
நிகரில் புகழாய்! உலகம்மூன்று
உடையாய்! என்னை ஆள்வானே!
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே!
புகல்ஒன்று இல்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே.

— நம்மாழ்வார்.

"தாயிற்சிறந்தொரு கோயிலும் இல்லை"

அடியேனை ஈன்றபோது, தாயாருக்கு வயது பத்தொன்பது. அப்போதுதான், அவருக்குத் தமிழ் எழுத்துப் பயிற்சி. 'பள்ளிக்கூடத்து அம்மா' என்ற பெயரில் எங்கள் ஊருக்கு (மாராடி) வந்த ஒரு பெரிய மூதாட்டியிடம் எம் தாயார் கல்வி பயின்றார். அடியேன், தொட்டிலினின்றும் கீழ்இறங்கி நடைகற்கத் தொடங்குமுன்பே, தாயார் கற்றுக் கொண்ட பாசுரங்கள் பலப்பல. அந்த வைணவப் பாசுரங்களைப் பாடிக்கொண்டே தம் மக்கட் செல்வத்தை வளர்த்துள்ளார்கள். 'தம்மைப் போலவே, தம் பிள்ளைகளும், திவ்வியப்பிரபந்தம், தேசிகப் பிரபந்தம் இன்னும் பல வைணவப் பிரபந்தம் ஆகியவற்றில் உள்ள பாசுரங்களைக் கற்றுக்கொண்டு பக்தர்களாக வாழ வேண்டும்' என்பது அவர்களது பெருவிருப்பம். தாயாரின் விருப்பத்திற்கு இணங்கியே நாங்களும் வாழ்ந்து வருகின்றோம்.

அடியேனுக்கு, இன்று, - அட்சய ஆண்டு, ஆவணித் திங்கள் 17–ந் தேதி ஆயில்ய நட்சத்திரம் — அறுபது ஆண்டுகள் நிறைவு பெறும் நன்னாள். இந்த நன்னாளில்,

எம் தாயார், பாசுரங்களைச்சொல்லி, நெஞ்ச நிறைவோடு அடியேனை வாழ்த்தினார்கள். வாழ்த்துமபோது, அவர்களுடைய உள்ளத்தெழுந்த ஆசையை வெளியிட்டார்கள். 'மக்களாய்த் தோன்றிய பலரும், இத்தகைய உயர்ந்த பாசுரங்களைப் பாராயணம் செய்து, பக்தர்களாகக் காலம் கழிக்கவேண்டும்' என்பதுதான் அவருடைய விருப்பமாகும். தாயார் விருப்பினை நிறைவேற்றுவதுதானே மக்கள் கடமை! அக்கடமை உணர்ச்சியின் வெளிப்பாடே, இவ்வைவணவக் களஞ்சிய நூல் வெளியீடாகும்.

இந்த வைணவச் செல்வத்துள் நான்கு பகுதிகள் அடங்கியுள்ளன. அங்கங்களின் பயன், நாராயண கவசம் ஆகிய இரண்டும், செவ்வைச் சூடுவார் பாடிய பாகவதத்துள் அமைந்துள்ளன. 'திவ்வியப்பிரபந்தப் பாசுரப்படி இராமாயணம்' என்பது, வியாக்கியானச் சக்ரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளை உருவாக்கிய புதுமைப் படைப்பாகும். 'திருக்கோளூர்ப் பெண்பிள்ளை இரகசியம்' என்னும் பகுதி, திருவாய்மொழி திருக்கோளூர்ப் பதிகத்தில் கலந்த எம்பெருமானார் இராமானுஜருடைய வாழ்க்கையில் நடந்த ஓர் அருமையான நிகழ்ச்சியாகும். இந்த நான்கும் பக்தர்களுக்கு நல்லதோர் பெருவிருந்து

"இச்செல்வம் பெற்றார் அனைவரும் விருந்துண்டு களிப்புறுக; தம் வாழ்க்கையில் சீரிய பயன் பெறுக; அதற்கு, எங்கும் உள்ள கண்ணன் தன் திருவருளை நல்குவானாக" என வேண்டி, அப்பெருமான் திருவடிகளை இறைஞ்சுகின்றேன்.

"ஈன்றாளின் எண்ணக்கடவுளும் இல்"

அன்புள்ள அடியேன்

**மு. இராமசாமி**

7, எல்லப்பச் செட்டியார் காலனி, 2—9—1986

இராசிபுரம்—637408.

ஸ்ரீ:

# இரண்டாம் பதிப்பின் முன்னுரை

தேனறாமகிழ்த் தொடையலும் மௌலியும்
திருக்கிளர் குழைக்காதும்
கானறாமலர்த் திருமுகச் சோதியும்
கயிரவத் துவர்வாயும்
மோனமாகிய வடிவமும் மார்பமும்
முத்திரைத் திருக்கையும்
ஞானதேசிகன் சரண தாமரையும்
என்நயன்ம் விட்டகலாவே.

'வைணவச் செல்வம்' என்ற நூல், இரண்டாம் பதிப்பில் 'வைணவக் களஞ்சியம்' என்ற திருப்பெயரைத் தாங்கிக் கொண்டு வெளிவருகிறது.

நான்கு பகுதிகளைக் கொண்டிருந்த 'செல்வம்' 'பாசுரப்படிப் பாகவதம்,' 'சின்னியம்மாள் ரகசியம்' என்ற இரு பகுதிகளைச் சேர்த்துக்கொண்டு, 'குகனொடும் ஐவரானோம்'. 'பின் குன்று சூழ்வான் மகனொடும் அறுவரானோம்' என்ற சக்ரவர்த்தி திருக்குமாரன் திருவுள்ளக் கருத்திற்கேற்ப ஆறாகப் பெருகியுள்ளது.

'அங்கங்களின் பயன்'— நாராயண கவசம்'— 'பாசுரப்படி ராமாயணம்'— 'திருக்கோளூர்ப் பெண் பிள்ளை ரகசியம்' என்ற நான்குப் பகுதிகளோடு, 'பாசுரப்படி பாகவதம்' என்ற அருமையான ஒரு நூலும் இத்தோடு இணைக்கப்பட்டுள்ளது இந்த இரண்டாம் பதிப்பில்.

முதல் பதிப்பின் விமர்சனம், 31—8—87-ந் தேதி 'இந்து' ஆங்கில நாளிதழில் வெளிவந்தது. விமர்சனம் செய்தவர் வைணவப் பெரியார் அக்னிகோத்ரம் ராமானுஜ தாத்தாச்சாரியார் ஆவார்.

விமர்சனம் கண்ட பக்தர்கள் பலர், 'வைணவச் செல்வம்' புத்தகம் வேண்டிக் கடிதங்கள் எழுதியிருந்தனர். வேண்டுகோள் கடிதங்கள் வந்தபோது, புத்தகம் ஒன்று கூட கைவசம் இல்லை.

'பக்தர்கள் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டுமே' என எண்ணிக் கொண்டிருந்தேன்.

எம்பெருமான் திருவருளால், எண்ணிய எண்ணம், ஒரு சால்புடைப் பெருமகனார் திருவுள்ளத்தை அடைந்தது.

அதன் பயன்தான் இந்த இரண்டாம்பதிப்பு வெளியீடு.

சேலம் நரசுஸ் காப்பி கம்பெனி உரிமையாளர் திரு. ஆர். பார்த்தசாரதி அவர்கள் நல்ல மணம் படைத்தவர். காப்பி மணப்பது போன்றே அவர்தம் மனமும் மணக்கும். தாம் பெற்ற செல்வத்தைப் பல நல்ல் காரியங்களுக்கு உதவும் நல்லுள்ளம் பெற்றவர்.

அந்த சால்புடைப் பெரும்கனார்தான் இந்நூல் வெளியீட்டுக்குப் பொருள் உதவி செய்ய முன்வந்துள்ளார்கள்.

சமய வளர்ச்சிக்குப் பேருதவி செய்துவரும் திரு. ஆர். பார்த்தசாரதி அவர்களும், அவர் குடும்பத்தினர் அனைவரும, செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமால் திருவருளால், 'பல்லாண்டு பல்லாண்டு நீடூழி வாழ வேண்டும்' என உளமார வாழ்த்துகின்றேன்.

அவர்தம் பேருள்ளத்தை ௭ன்றும் மறவேன். அவர்க்குப் பெரு நன்றியன.

முதற்பதிப்பை அச்சிட்டுக் கொடுத்தது போன்றே, இப்பதிப்பையும் அழகுற அச்சிட்டுக் கொடுத்த, என் அருமை நண்பர், திரு. மி. மு. சின்னாண்டார் (பொன்முடி அச்சகத்தார்) அவர்களுக்கும் எனது இதயம் கனிந்த நன்றியை உரித்தாக்கிக் கொள்கின்றேன்.

இந்நூலைப் படித்து இன்புறும் பக்தர்கள் அனைவரையும் மானசீகமாக வணங்கி மகிழ்கின்றேன்.

'திருவரங்கம்'
7, எல்லப்ப செட்டியார் காலனி,
இராசிபுரம்—637408.

அன்புள்ள அடியேன்
**மு. இராமசாமி**

ஸ்ரீ :

# அங்கங்களின் பயன்

பாகவதத்தில் இரண்டாவது கந்தத்தில் இரண்டாவது அத்தியாயமாக இப்பகுதி அமைந்துள்ளது. சுகப் பிரம்மம் பரிட்சித்துக்குச் சொல்கின்றார்.

பகலைப் பகவான் எண்ணத்தில் கழிக்க வேண்டும்.

1 இறந்தொழிந் ததுவெங் கூற்றம்
என்றுஉளத்து உணர்ந்தார் போலும்!
அறந்தலை மணந்த செங்கோல்
ஐவர்பார் ஏழும் காப்ப
நறுந்துழாய்ப் பகவன் தூது
நடந்ததாள் கமலப் போது
மறந்தனர் மாக்கள், வாளா
வருபகல் கழிக்கின் றாரே!

கண்ணனைக் காணாத கண்கள்
மயில் தோகையின் வெறுங் கண்கள்

2 மழைதுளி மறுத்த கானின்
வற்றள்நீல் மரமும் அந்தண்
குழைதர, வன்திண் குன்றும்
குழைதர, அமுதம் ஊறும்
கழைஇசை வடித்தான் செவ்வி
காண்கிலாக் கண்கள், மஞ்ஞைத்
தொழுதியங் கலவை மேய
துஞ்சலில் வறுங்கண் அன்றே!

*கண்ணன் திருவடித் திருத்துழாயை*
*முகந்து பார்க்காத மூக்கு பயனற்றது*

3 காதம்ஓர் நான்கு தெய்வக்
கடிகமழ் கமலைக் கொண்கன்
பாததா மரையில் சாத்தும்
பசுந்துழாய் மோந்து மோந்து
தீதற உயிர்த்தி லானேல்
செத்தவன்; உயிர்ப்பது எண்ணின்
ஊதுலைக் குருகு மற்றாங்கு
உயிர்ப்பது போலும் மாதோ!

*திருமாலைப் பூசியாதகைகளும், அவன் நாமத்தைப்*
*பாடாத நாவும் பயனற்றன*

4 இடிக்குரல் யானை வெண்கோடு
இறுத்தவன் இணைப்பொன் தாளின்
கடித்துணர் புணையாக் கைகள்
கையறு கைக ளாமல்;
பொடித்தசெங் கதிர்போற் காந்தி
பொழிமணிச் சூட்ட ராவின்
நடித்தவன் நாமம் பாடா
நாவழங் காத நாவே!

*3 : கடி — வாசனை; கமலை — தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள்; கொண்கன் - கணவன்; குருகு - துருத்தி.*

*4 : வெண்கோடு - வெள்ளிய தந்தம்; துணர் - பூங்கொத்து; கையறு - செயலற்ற; காந்தி - ஒளி; அரா - பாம்பு; நா - நாக்கு*

*ஆண்டவன் அடியில் தாழாத தலை, தலை அல்ல;*
*அவன் சரிதம் கேட்டு உருகாத உள்ளம்*
*கல்; அல்லது இரும்பு.*

5 பனியிரு விசும்பு தேடப்
பழமறை முடிவின் நின்ற
தனிமுதல் அடியில் தாழாத்
தலை,தலை என்ன லாகா;
நினைதொறும் இனிய வாய
நெடியவன் சரிதம் கேட்டுக்
கனிவுறா உளம் இரும்போ
கற்கொலோ அறிகி லேமால்!

*கோயிலுக்குச் செல்லாத கால், மரக்கால்;*
*கண்ணன் சரிதம் கேளாச் செவித்*
*தொளை, பாம்புப்புற்று.*

6 தவப்பொழி மாரி காப்பத்
தடவரைக் கவிகை அன்று
கவித்தவன் கோயில் செல்லாக்
கால்,மரத்து இயன்ற காலே;
உவப்பினன் அமுதம் ஊறி
ஒழுகுமால் சரிதம் கேளாச்
செவித்தொளை நச்சு நாகம்
செறிவதோர் தொளைமற் றாமால்!

*5 : மறை–வேதம்; தனிமுதல் - திருமால்;*
*தாழா – தாழ்ந்து.*

*6 . மால் – மழை; வரை - மலை; நஞ்சு – விஷம்*
*நாகம் - பாம்பு.*

ஸ்ரீ:

# ஸ்ரீமத் பாகவதம்

# நாராயண கவசம்

சுழித்து நல்அமுது ஒழுகிஅம்
சுகமும் சேர்ந்து,
தழைத்த நான்மறைத் தடம்சினைக்
கற்பகத் தருவில்
பழுத்து உதிர்ந்ததி பரமபா
கவதம்என்று இசைக்கும்
விழுப்பெ ருங்கனி நுகர்ச்சியே
விரும்புவார் மேலோர்.

'வாடாத தவவாய்மை முனிராசன்' எனப் போற்றப் படுகின்ற வியாசபகவான், வேதமொழிகளை ஒன்றாகத் தொகுத்தார். பின்பு அத்தொகையினை-வேதத்தொகுப்பை நான்காக வகுத்துத் தந்தார். பிறகு உபநிடதங்களை உருவாக்கினார். பிரம்மசூத்திரம் அருளினர். பாமரர்க்கும் தத்துவக் கருத்துக்களைப் புரியவைக்க வேண்டி கதை உருவாக மகாபாரதத்தை எழுதினார்; இவ்வளவு செய்தும் அவர் மனம் நிறைவு பெறவில்லை, உலகத்துக்குக் கொடுக்கவேண்டிய அனைத்துக் கருத்துக்களையும் வழங்கினால்தான் அவர் எண்ணம் பூர்த்தியடையும். நாரத பகவான் யோசனைப்படி வியாசர் இறுதியாக இந்தப் பாகவதத்தை அருளிச்செய்து மன நிறைவு பெற்றார்.

குறைவான நாட்களுக்குள் நிறைவான பொருளைப் பெறவேண்டும், எப்படி? என்ற சிந்தனையில் மூழ்கியவன் பரிசித்து, அதற்கு வழி காட்டியவர் சுகப்பிரம்மம். அது தான் இந்தப்பாகவதம். சில்வாழ்நாளும் சிற்றறிவினரும்

பெரும்பிணியினருமான மக்கள் நிறைவெய்துதற்கு உற்ற துணையாய் அமைவது பரமபாகவதமாகும்.

இந்நூலுள் ஆறாம் கந்தந்தில் (ஆறாவது பிரிவு) நாலாவது அத்தியாயமாக அமைந்திருப்பது "நாராயண கவசம் உரைத்தது" என்பதாகும். இந்திரன் அசுரர் களிடம் தோற்று தன் செல்வத்தை எல்லாம் இழந்து வெறுங்கையினனாக நின்றான். தேவேந்திரனுக்கு, விச் சுவரூபன் குருவாக அமைந்து, அவனது பகைவர்களாகிய அசுரர்களை வென்று, இழந்த செல்வத்தை மீட்டும் பெறுவதற்கு உதவினர் அவ்வுதவிதான் இந்த நாரா யணகவசம் ஆகும். கவசம் என்பது போர்க்களம் சென்று பகைவர்களைத் தாக்கும் வீரர்கள், எதிரிகளின் ஆயுதங் கள் தம்மைத் தாக்காதவாறு மார்பில் பாதுகாப்பாக அணிந்துகொள்ளும் ஒரு கருவியாகும்.

நாராயண மந்திரத்தைக் கவசமாகக்கொண்டு தேவேந்திரன் அசுரர்களைத் தோற்கடித்து, இழந்த செல் வத்தைப் பெற்று மகிழ்ந்திருந்தான்.

பெற்றுள்ளதைக் காத்துக் கொள்ளவும், இழந்ததை மீட்டுக்கொள்ளவும், துன்பப் பகையை வெல்லவும் மக்கள் விரும்புகின்றனர். அவ்விருப்பத்தை நிறைவேற்றுவது இந்த நாராயண கவசம் ஆகும்.

ஸ்ரீ:

# கடவுள் வாழ்த்து

சீர்பூத்த பரஞ்சுடராய்ச்
சித்தாகிக் கானலிடை
நீர்பூத்த தெனஉலகம்
நிறைந்தொளிர்தன் பால்தோன்ற
ஏர்பூத்த முத்தொழிலும்
இனிதுஇயற்றித் தனிநின்ற
கார்பூத்த திருமேனிக்
கடவுள்மலர் அடிநினைவாம்!

## சுகமுனிவர் தியானம்

பிறந்தபொழு தேதுறந்து பிறைக்குழவி
போல்நடப்பப் பின்போய்த் தொன்னூல்
அறைந்தபுகழ் வியாதமுனி ஆதரத்தான்
மதலாயென்று அழைப்பச் செவ்வாய்
திறந்துநறை மொழியுமலர்ச் செழுந்தருவும்
ஏன்என்ன உயிர்கள் யாவும்
நிறைந்துறையும் சுகமுனிவன் நிரையிதழ்த்தா
மரைமலர்த்தாள் நினைதல் செய்வாம்!

## கவசம் பயிலும் முறை

அரும்புனல் படிந்து புனிதமுற்று அங்க
நியாசம் ஆங்கு அடைவுடன் இயற்றித்
திருந்திய மறைசொல் கரநியா சமுந்தான்
செய்ம்முறை திருத்தகப் புரிந்து
வரந்தரு மாயன் மலர்ப்பதத் துணையை
மனத்திடை மருவுறக் கருதிப்
புரந்தரன் தனக்கு விச்சுவரூபன்
புகலுமால் கவசத்தைப் புகல்வாம்!

## நாராயண கவசம் படிக்கும் முறை

நீரில் குளித்து உடலைத் தூய்மை செய்துகொண்டு. இருதயம் முதலானவற்றைத் தொடுதல், விரல்களால் கைகளைத் தொடுதல் ஆகியவற்றை முறையாகச் செய்தல் வேண்டும். பிறகு நாராயணனுடைய திருவடிகளை மனத்தில் இருத்திக்கொண்டு இந்தக் கவசத்தைப் பாராயணம் செய்தல் வேண்டும். மாயன்-நாராயணன்; புனிதமுற்று—பரிசுத்தம் அடைந்து.

திருமகளும், ஸ்ரீவத்ஸம் என்னும் மச்சமும் சேர்ந்திருக்கும் திருமார்பும், அம்பு, கேடயம், வாள், சக்கரம், சங்கு, தண்டு, கயிறு, வில் என்ற எட்டு ஆயுதங்களைப் பெற்றிருக்கும் ஒளி பொருந்திய திருக்கரங்களும், கருடனது தோள்மேல் வீற்றிருக்கும் தாமரைமலர் போன்ற திருவடியும் உடைய நாராயணன் அவைகளுடன் எம்முன் வந்து, எல்லா இடத்திலும் எல்லாக் காலத்திலும் எம்மைப் பாதுகாக்க வேண்டும்.

மலர்மகள் – தாமரை மலரில் அமர்ந்துள்ள பெரிய பிராட்டி; சிலை-சார்ங்கம் என்னும் வில்; கலுழன்-கருடன் நளினம்—தாமரை; வளை—சங்கு (பாஞ்ச சன்னியம்)

## தியானத் திருமேனி

மலர்ந்தசெங் கமல மலர்மகள் மறுவார்
 மார்வமும் வாளிகே டகம்வாள்
இலங்குளழில் ஆழி வளைகதை பாசம்
 இருஞ்சிலை தரித்த வெண்கரமும்
நலந்தரு கலுழன் புயத்து இனிது உறைந்த
 நளினமென் பாதமு மாக
வலந்தர முன்வந்து எங்கும்எப் பொழுதும்
 மாயவன் கருணையில் காக்க!

## பயணம் செய்வோர் தியானம்

புகழ்பெரு மீன்உரு எடுத்த புங்கவன்
அகமகிழ் தந்துநீர் அடைந்து காக்க; இச்
சகமிசை வாமனன் சார்ந்து காக்க; ஏர்
மிகுநிலம் அளந்தமால் விசும்பில் காக்கவே!

நீரில் பயணமாகக் கப்பலில் செல்லும்போது மச்சாவதாரமும், நிலத்தில் ஓடும் போக்குவரத்து வாகனங்களில் செல்லும்போது வாமனாவதாரமும், விண்வழிப் பயணமாக ஆகாய விமானத்தில் செல்லும்போது திருவிக்கிரம அவதாரமும் பாதுகாக்கட்டும்.

புங்கவன்–திருமால்; சகமிசை–பூமியில்.

## போரில் வெற்றி காண்போர் தியானம்

பன்னிய வரைமுதல் பலஅ ரண்களில்
துன்னுவெங் சமத்திடைத் தோன்றலுற்றுமுன்
மன்னுவெங் கனகனை மாய்த்த மைந்துடை
நன்நலம் சேர்நர மடங்கல் காக்கவே!

மலை, காடு, மதில் முதலிய அரண்களை உடைய போர்க்களத்தில் நின்று போர் செய்யும்போது, இரணியனைக் கொன்ற நரசிம்மவதாரம் பாதுகாக்கட்டும்.

வரை-மலை; சமத்திடை போர்க்களத்தில்; கனகன்- இரணியன்; நரமடங்கல்—நரசிங்கம்.

## பற்றொழிப்போர் தியானம்

வெற்றியாண் கேழலாய் விளங்கு மேலவன்
பெற்றிடு வழிதொறும் பெரிது காக்கவே
நற்றவ நரன்சொல் நாறா யணன்நணி
உற்றவர் பற்றெலாம் ஒழித்துக் காக்கவே.

செல்லும் வழிகளில் ஏற்படும் ஆபத்தை எல்லாம், வராக அவதாரமாக வந்த திருமால் தடுத்துப் பாதுகாக்கட்டும். உலகத்தாரிடம் கொண்டுள்ளப் பாசத்தை நீக்கி, பாதுகாப்பதற்கு, நரனும் நாராயணனுமாக வந்தத் திருமால் வரட்டும்.

கேழல்—வராகம்; மேலவன்—திருமால்; நணி—நண்ணி (அடைந்து)

## வழிபாடு செய்வோர் தியானம்

தசரதன் மதலையாம் இராமன் தன்துணை
இசைதரும் இளவலோடு இனிது இயைந்துஇருந்
திசைதொறும் திசைதொறும் செப்புங் காலெலாம்
விசயம்வந்து உறநணி விரைந்து காக்கவே.

பெரிய திசைகளில் எல்லாம், இறைவன் திருநாமத்தைச் சொல்லும்போது, தசரதன் மகனாகத் தோன்றிய இராமபிரான் தனது தம்பி இலக்குவனோடு வந்து பாது காக்கட்டும்.

மதலை — மகன்; இளவல் — தம்பி (இலக்குவன்) விசயம் - வெற்றி; இராமன் இளவலோடு இயைந்துகாக்க.

## மலைப் பயணத்தார் தியானம்

கழைதிகழ் கார்வரைக் கவினும் சாரலின்
மழைதவழ் குவட்டின்மீ மருவு போல்தெலாம்
பழமறை மொழிதரு பரசு ராமன்உள்
விழைவொடு குறைவற விரைந்து காக்கவே.

மூங்கில்கள் நிறைந்த மலையில் நடந்து அதன் உச்சியில் தங்கியிருக்கும்போது, பரசுராமனாகத் தோன்றிய நாராயணன் பாதுகாக்கட்டும்.

## சாந்தி வேண்டுவோர் தியானம்

சிந்தையுள் மகிழ்தத்தாத் திரையர் தீங்குஅற
மந்திரம் நவில்வுழி வந்து காக்கவே
பந்தமில் இடபனாம் பைந்து ழாய்முகில்
சந்ததம் குளிரில்தா பத்தில் காக்கவே.

மந்திரங்களை ஓதும்போது தத்தாத்திரையாக வந்த பெருமானும, குளிரோ, வெப்பமோ தாக்கும் காலத்து ரிஷப தேவனாகத் தோன்றிய பெருமானும் வந்துத் துன்பத்தைப் போக்கிப் பாதுகாக்கட்டும்.

இடபன்—ரிஷபதேவர்; நாராயணன்தான் தத்தாத்திரையாகவும் ரிஷப தேவராகவும் அவதரித்தவன்.

## பாச நீக்கம் வேண்டுவோர் தியானம்

கருதரும் சீர்திகழ் கபிலன் அன்பொடும்
இருவினைக் கட்டறுத்து இனிது காக்கவே
தரைபுகழ் மறைதெரி சனற்கு மாரன்தான்
பொருமதன் தருதுயர் நோக்கிக் காக்கவே.

நல்வினை தீவினைகளால் ஏற்படும் பாசக்கட்டை அறுத்து.கபிலதேவனாக வந்தபெருமான் பாதுகாக்கட்டும்.

சனற்குமாரன், மன்மதன் தரும் காமத்தால் விளையும் துன்பத்தைப் போக்கிக் காக்கட்டும்.

மதன்–மன்மதன்; இருவினை-நல்வினை, தீவினை

## சத்துரு ஜெயம் வேண்டுவோர் தியானம்

வெறுப்பொடு பகைக்குழு மிடையும் வெங்கொலை
மறத்தினில் பொலிதரும் வழிகள் தோறும்வந்து
அறத்தினை நிறுவிய அயக்கி ரீவனாம்
மறைப்பொரு ளாயவன் வந்து காக்கவே!

அயக்கிரீவன் ஆன திருமால் பகைக்குழு நிறைந்த வழிகளினும், கொலைகள் நிறைந்த வழிகளிலும் வந்து நின்று ஆபத்தைத் தடுத்து பாதுகாக்கட்டும். இப் பெருமானே நம் தேசிகனுக்கு ஞானம் வழங்கியவன்.

மறம் - வீரர்; அறம் - தருமம்.

## வழிபாட்டைத்தடை நீங்கவேண்டுவோர் தியானம்

காரதிர் கடலெனக் கவின்செய் வண்ணனைப்
பாரத சமர்த்தலைப் பரவ வென்றிசெய்
சாரதி தனைத்தொழும் சமயத்து இன்னருள்
நாரத முனிவன் நயந்து காக்கவே!

பாரதப் போரில் அருச்சுனன் துதிக்குமாறு தேரை ஓட்டிய கண்ணனை வழிபடும்போது ஏற்படும் இடையூற்றைப் போக்கி. நாரதமுனிவன் பாதுகாக்கட்டும், நாரத முனிவன் திருமாலின் அம்சம்.

கடல் எனக் கவின்செய் வண்ணன்-நீலநிறக் கண்ணன்
சாரதி–தேரோட்டி

## நோய் நீக்கம் வேண்டுவோர் தியானம்

கொழுந்துள வணிந்தபைங் கூர்ம மாயமால்
அழுந்தவெந் நரகுறாது அருளிற் காக்கவே
வழங்குதன் வந்திரி யாய மாயவன்
விழைந்தனன் ஆதியில் விரைந்து காக்கவே!

திருத்துழாய் மாலை தரித்தவரும், கூர்மாவதாரம் எடுத்தவரும் ஆய திருமால், நரகத்தில் அழுந்தாமல் அருள் செய்து என்னைப் பாதுகாக்கட்டும். தன்வந்திரிப் பெருமாள் நோயைப் போக்கி விரைவாகப் பாதுகாக்கட்டும்.

கொழுந்துளவு—திருந்துழாய்; கூர்மம்—ஆமை

## ஆபத்தைத் தடுக்க வேண்டுவோர் தியானம்

போற்றுசீர் வேள்வியம் புருடன் போந்தெனைக்
கூற்றடாது அன்புஎம் கொண்டு காக்கவே
ஏற்றநல் பலமுனம் ஏயும் ராமன்வெஞ்
சீற்றம்வந் துழிநனி சிறந்து காக்கவே!

யாக புருஷனாகியத் திருமால், என்னை எமன் வருத்தாதவாறு பாதுகாக்கட்டும். பலராமன், எனக்குக் கோபம் வரும்போது, அந்த ஆபத்தினின்றும் என்னைப் பாதுகாப்பாற்ற வேண்டும்.

போந்து-வந்து; கூற்று-எமன்; அடாது-வருத்தாதபடி; பலம்முனம் ஏயும்ராமன் — பலராமன்; சீற்றம் — கோபம்;

## கல்விபெற வேண்டுவோர் தியானம்

விடலரும் நான்மறை வியாதன் என்பவன்
ஓடிவறு விஞ்சைமிக்கு உதவிக் காக்கவே
படிமிசை அறந்தரப் பௌத்த னாகுமால்
கொடியவர் மதங்குறு பாது காக்கவே.

நான்கு வேதங்களை வகுத்துக் கொடுத்த வியாச பகவான், நான் கல்வி கற்கும்போது எனக்கு உதவி செய்து என்னைக் காக்கட்டும். பௌத்தனாகத் தோன்றிய திருமால் கொடியவர்களின் தீய மதங்கள் என்னை அணுகாதவாறு பாதுகாக்கட்டும்.

வியாசனும், பௌத்தனும் திருமால் அம்சம்.

### வறுமை நீக்கவேண்டுவோர் தியானம்

பரியுரு எடுத்துஅறம் பரிக்கும் பச்சைமால்
உரைகலித் தீமைவந்து உறாது காக்கவே
வருபகல் அறுவகை யாக்கி முந்துகூறு
அருளொடு கேசவன் அடைந்து காக்கவே!

கல்கியவதாரம் செய்யும் பெருமாள், கலிகாலத் தீமை, என்னை வந்து சேராதவாறு தடுத்துப் பாதுகாக்கட்டும். கேசவப்பெருமாள், பகலின் முதல் பகுதியில் வரும் இடையூற்றைத் தடுத்து என்னைப் பாதுகாக்கட்டும்.

பரியுறு – குதிரை வடிவம் (கல்கி)
அறத்தைப் பாரிக்கும் – அறத்தைத் தாங்கும்

### காலத் துன்பத்தைக் களைய விரும்புவோர் தியானம்

வலஞ்செய இரண்டென வகுத்த கூற்றில்,ஆன்
குலம்புரந் தளித்தகோ விந்தன் காக்கவே
பலந்தர மூன்றெனப் பகுத்த கூற்றினில்
நலஞ்செய் நாராயணன் நயந்து காக்கவே!

பகல் பொழுதின் இரண்டாவது, மூன்றாவது பகுதிகளில் வரும் துன்பத்தைத் தடுத்து, என்னைப் பசுக்குலம்

காத்த கோவிந்தனாகிய நாராயணன் பாதுகாக்கட்டும்.

கூற்று - பகுதி; நயந்து - விரும்பி:

பொருவிழா நான்கெனப் புகன்ற கூற்றினில்
பருதிநேர் சக்கர பாணி காக்கவே
அரியசீர் ஐந்தென அறைந்த கூற்றினில்
வருமது சூதனன் மகிழ்ந்து காக்கவே!

பகல் காலத்தின் நான்காம் பகுதியிலும் ஐந்தாம் பகுதியிலும், வரும் துன்பத்தைப் போக்கி, என்னை சக்கர பாணியும் மதுசூதனனும் ஆகிய நாராயணன் பாதுகாக்கட்டும்.

சக்கரபாணி - சக்கராயுதத்தையுடைய திருமால்

புரைதப ஆறுஎனப் புகன்ற கூற்றினில்
உரைதரு மாதவன் உவந்து காக்கவே
இரசனி முகத்தினில் இந்தி யங்களுக்கு
அரசன்என்று உரைக்குமால் அடைந்து காக்கவே!

மாதவன், பகல் காலத்தின் ஆறாவது பகுதியில் வரும் இடையூற்றைத் தடுத்து, என்னைப் பாதுகாக்கட்டும். இந்திரியங்களுக்கு அரசனாகிய திருமால், இரவுக் காலத்தின் முதல் பகுதியில் வரும் ஆபத்தைத்தடுத்து என்னைப் பாதுகாக்கட்டும்.

இரசனி முகம் - இரவின் தொடக்கம்
இந்தியங்களுக்கு அரசன் - ஹ்ருஷீகேசன்.

பன்னுமுச் சகம்தரு பற்ப நாபியான்
துன்னிய நிசிநடுச் சூழ்ந்து காக்கவே
உன்னுறும் அபரமாம் நிசியில் ஒண்புகழ்
மன்னிய திருமறு மார்பன் காக்கவே!

நள்ளிரவில் பத்மநாபனும், இரவின் பிற்பகுதியில் ஸ்ரீவத்ஸனும் என்னைப் பாதுகாக்கட்டும்.

முச்சகம்-மூன்றுஉலகம்; பற்பநாபியான்-பதுமநாபன்; அபரமாம் நிசி-நள்ளிரவின் பிற்பகுதி; திருமறு-ஸ்ரீவத்ஸம்

களிகொள்சீர் வைகறைக் கலந்து வண்புகழ்
வளர்சநார்த் தனன்உவம் மகிழ்ந்து காக்கவே
விளையும்நற் சந்திகள் தோறும் மிக்குவந்து
அளிசெய் தாமோதரன் அடைந்து காக்கவே!

வைகறைப் பொழுதில் ஜநார்த்தனன் என்னை அடைந்து பாதுகாக்கட்டும். அன்பைப் பெருக்கும் தாமோதரன், பகல் இரவு சந்திக்கும் எல்லாக் காலங்களிலும் என்னைக் காப்பாற்றட்டும்.

கதுவி - அடைந்து.

## சக்கராயுதத்தைத் தியானித்தல்

கற்றையங் கதிரழல் கடவுள் காட்டகம்
முற்றுவெவ் வரில்களை முருகுகு மாறுபோல்
அற்றம்இல் அயில்படை அரசுஎன் ஆழிதான்
உற்றபல் பகைதுமித்து உவந்து காக்கவே!

நெருப்புக் கடவுளாகிய அக்கினி, காட்டில் சிறு தூறுகளை எல்லாம் அழிப்பதைப் போல, எல்லா ஆயுதங்களுக்கும் அரசு எனக் கூறத்தக்கச் சக்கராயுதம், எனது பகையை அழித்து நாசம் செய்து என்னைக் காப்பாற்றட்டும்.

அழல்கடவுள் - அக்கினி; அரில்-சிறுதூறு; திமித்து - நாசம் செய்து.

## கேடகம், வாள் இவற்றைத் தியானித்தல்

ஆடக மணித்தொடி அமலன் அங்கைசேர்
கேடகம் சமர்க்குளதிர் கெழுமி னோர்விழி
மாடகம் மறைப்பமாற் றலரை மாய்த்துஇருங்
கூடகத் துறைந்தகூர் வாளும் காக்கவே.

திருமால் கையில் உள்ள கேடயம், போர்க்களத்தில் எதிரிகளின் கண்களை மறைக்கட்டும். அப்பெருமான் உறையுள் தங்கிய வாள், பகைவரை அழித்து என்னைப் பாதுகாக்கட்டும்.

ஆடகம் - பொன்; தொடியை உடைய அமலன்; மாற்றலர் - பகைவர்; கூடகம் - உறையுள்.

## கதாயுதத் தியானம்

கொடியன பூதம்வெங் கூளி யேமுதல்
இடிநிகர் தெவ்வினை இரிய நூறிநுண்
பொடியெனப் பிதிர்ந்துநம் புனிதன் பூங்கைசேர்
தடியொரு குறைவறச் சார்ந்து காக்கவே!

திருமாவின் அழகிய கையில் உள்ள கதாயுதம் பகைகளை நாசம் செய்து என்னைப் பாதுகாக்கட்டும்.

தெவ்வினை - பகைகளை. புனிதன் - திருமால்; தடி - கதை.

## பாஞ்ச சன்னியத் தியானம்

சூதுசெய் பகைக்குழு துனுக்கம் எய்திஇப்
பூதலத்து இரிதர வெருட்டிப் பூஉறை
மாதுஉளம் விரும்புகார் வண்ணன் வாயில்வைத்து
ஊதுவெண் சங்கம்உள் உவந்து காக்கவே!

தாமரை மலரில் வசிக்கும் இலக்குமி விரும்பும் மேக நிற வண்ணனாகிய கண்ணன் திருவாயில் வைத்து ஊதும் வெண் சங்கம், வஞ்சனையைச் செய்யும் பகைவர்கள் நடுங்கி ஓடும்படிச் செய்து என்னைப் பாதுகாக்கட்டும்.

துணுக்கம் - நடுக்கம்! பூவுறைமாது - திருமகள்.

## கருடத் தியானம்

பங்கயச் செங்க ணானைப்
பரிக்கும்வெம் பறவை வேந்து
பொங்கும்இன் னருளின் வந்துஎப்
பொழுதினும் உவந்து காக்க
தங்ககம் புறம்பு திக்குச்
சாற்றிய விதிக்கு மேல்கீழ்
எங்கும்எப் பொழுதும் வந்துற்று
எறுழ்நர மடங்கல் காக்க!

திருமாலைத் தாங்கிக்கொண்டு செல்லும் பறவைகளின் அரசனாகிய கருடன், தனது இனிய அருளோடு எல்லாக் காலத்தும் என்னைப்பாது காக்கட்டும்.

நரசிம்மமூர்த்தி, உள் இடம், வெளி இடம் பெருந்திசை (வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு) கோணத்திசை (வட கிழக்கு, தென்மேற்கு போன்றன) மேல் இடம், கீழ் இடம் முதலியவற்றில் வரும் ஆபத்தையும் எந்தக்காலத்து வரும் ஆபத்தையும் தடுத்து என்னைப் பாதுகாக்கட்டும்.

செங்கணான் - திருமால்; பறவை வேந்து-கருடன்; எறுழ்—வலிமை;விதிக்கு - கோணத்திசை; நரமடங்கல் — நரசிங்க மூர்த்தியாகியத் திருமால்.

## விஷ்வக் சேனர் தியானம்

மாயவன் நாம ரூபம்
வாகனம் வாளி யாதி
ஆயஐம் படைகள் சேனைக்கு
அணிதிகழ் தலைவன் என்னும்
தூயவன், பிராணன் புந்தி
சொல்மன யாக்கை யோடு
மேயஇந் தியங்கள் தம்மை
விருப்பொடு மிடைந்து காக்க!

திருமாலது பெயர், உருவம், வாகனம், அம்பு முதலிய ஐம்படைகளுக்குத் தலைவனாகிய விஷ்வக்சேனர், பிராணன், புத்தி, சொல், மனம், உடல் இவைகளோடு பொருந்திய இந்திரியங்களை விருப்பத்தோடு பாதுகாக்கட்டும்.

வாகனம் - கருடன்; வாளி அம்பு; புந்தி-புத்தி; இந்தியங்கள் - இந்திரியங்கள்.

## விச்சுவரூபன் நிறைவுரை

என்றுஅரி உருவ மாகி
இலகும்இக் கவயம் தன்னை
வென்றிசெய் அமரர் வேந்தே
விருப்பொடு தாங்கு வாயேல்
வன்திறல் பகைஞர் தம்மை
வல்லையின் வேறி என்னா
ஒன்றுவிச் சுவரு பன்தான்
உரைத்தனன் உவந்து மாதோ!

"திருமால் வடிவாகி விளங்கும் இந்த நாராயணக் கவசத்தை, தேவேந்திரனே! விருப்பத்தோடு தாங்கிக்

கொள்ளுவாயானால், உன் பகைவர்களை எல்லாம் நீ வென்று விடலாம்'' என்று விச்சுவ்ரூபன் இந்திரனுக்கு இதனை மகிழ்ச்சியோடு உரைத்தான்.

அரியுரு - திருமால்வடிவம்; வேறி - வெல்வாய்.

## நாராயண கவசத்தின் பயன்

இனையநல் கவயம் கேட்போர்
இயம்புவோர் யாவ ரேனும்
வினைசெய்வெம் பிணியின் ஒன்றார்
வேண்டிய பெறுப என்றும்
குனிதிரைக் கடல்சூழ் பார்மேல்
கொடும்பகை யிலராய்க் கங்கைப்
புனல்வழி பொலங்க ழல்தாள்
புனிதனைப் பொருந்து வாரால்!

இந்த நாராயணக் கவசத்தைச் சொல்பவர்கள், சொல்வதைக் கேட்பவர்கள் யாவராக இருப்பினும் அவர்கள் தீவினையின் நோயை அடையமாட்டார்கள். நினைத்ததை அடைவார்கள். இந்த உலகத்தில் எந்த கொடும் பகையும் இல்லாதவராவர்; இறுதியில் கங்கை நீர் வழியும் திருவடிகளை உடைய நாராயணனைச் சேர்ந்து பேரின்பம் பெற்றுத் திகழ்வார்கள்.

பிணி—பிறவிநோய்; பார்—உலகம்; புனல்—கங்கை; புனிதன் — நாராயணன்.

ஸ்ரீ:

# பாசுரப்படி பாகவதம்

பாசுரப்படி இராமாயணத்தை உருவாக்கியருளியவர் வியாக்கியானச் சக்கரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளை. இவர் காலத்து வாழ்ந்த வைணவ ஆச்சாரியார் ஒருவர், இதைப்போல தாமும், வைணவ பக்தர்களுக்கு ஒரு நூலை உருவாக்கிக் கொடுக்க எண்ணியிருந்தார்.

அவ்வெண்ணத்தின் வெளிப்பாடே, 'பாசுரப்படி பாகவதம்' என்ற நல்லதோர் பக்தி நூல்.

ஆழ்வார்கள், இராமாவதாரத்திலும், கிருஷ்ணாவ தாரத்திலும் பெரிதும் ஈடுபட்டவர்கள். அந்த அவதாரங் களின் அருஞ்செயல்களில் ஆழங் கால் பட்ட அவர்கள், தம் அனுபவப் பேரானந்தத்தைப் பாசுரங்களாக்கித் தந்தனர்.

இராமாவதாரச் செயல்களின் வரிசைத் தொகுப்புப் பாசுரப்படி இராமாயணம். கண்ணன் புரிந்த அருஞ்செ யல்களின் வரிசைத் தொகுப்புப் பாசுரப்படி பாகவதம்.

இந்த இரண்டனையும் கற்பவர்கள், இராமாயணம், பாகவதம் என்ற நூல்களோடு, ஆழ்வார் பாசுரங்களை யும் அனுபவித்து இன்புறும் பேறு பெற்றவர்கள் ஆவார் கள்.

பாசுரப்படி பாகவதத்தின் மூலம், வைணவப் பக்தர் கள் நல்லின்பப் பேறு பெற உதவியவர் 'வங்கி புரத்து ஆச்சி' எனப்படும் ஆச்சாரியார் ஆவார்.

இவர், 'ஸ்ரீரங்கநாதன்' என்ற இயற்பெயரினர்; பாரத் வாஜ கோத்திரத்தைச் சார்ந்தவர்; வங்கிபுரத்தைப்

பிறப்பிடமாகக் கொண்டவர்; 'அகலகில்லேன் இறையும்' என்ற அலர்மேல் மங்கையைப்போல, 'திருவரங்கநாதனைப் பிரிந்துவாழேன்' என்ற வைராக்கியம் உடையவர்.

இவர், பிறப்பிடமான வங்கி புரத்தை 'வேண்டாம்' எனத் துறந்து, அரங்கநாதன் அர்ச்சாவதார மூர்த்தியாகக் காட்சியளிக்கும் திருவரங்கப் பெரு நகருள் புகுந்தவர்.

திருவரங்கக் கோவிலில், ஸ்ரீ வைஷ்ணவ தர்சன நிர்வாகம் செய்யும் கைங்கரியத்துக்கு உரியவரானார் இவர்.

திருவரங்கத்து நம்பெருமாளுக்கு, நாள்தோறும், பால், எண்ணெய் ஆகியவற்றை அன்புள்ளத்தோடு கொடுத்துவரும் கைங்கரியத்தில் ஈடுபட்டவராய் வாழ்ந்து வந்தார் வங்கி புரத்தார்.

இவருடைய அன்புச் செயல், பிருந்தாவனத்தில் கண்ணபிரானிடம் உள்ளத்தைப் பறி கொடுத்த ஆய்ச்சிமார்களின் செயலை ஒத்திருப்பதாகத் திருவுள்ளங் கொண்ட அர்ச்சாவதார நம்பெருமாள், இப்பெரியவரை 'ஆய்ச்சி'யாகக் கண்டார்.

தாய், தன் குழந்தைக்குப், பரிவோடு பாலமுது ஊட்டுவது போல, நம் பெருமாளுக்குப் பாலமுது வழங்கும் கைங்கர்யம் செய்து வந்தமையால், இவர் 'வங்கி புரத்து ஆச்சி' என வைணவச் சான்றோர்களால் அன்போடு அழைத்துப் போற்றப்படுபவரானார்.

நாதமுனிகளுக்குத், தன் திருமகளார் அரவிந்தப் பாவையை, திருத்தேவியாகக் கன்னிகாதானம் செய்து கொடுத்தமையால், 'நாதமுனிகளுக்கு மாமனார்' என்ற பேர் பெற்றவராய் விளங்கினார் வங்கிபுரத்து ஆச்சி.

அர்ச்சாவதாரத்தில் திருவரங்க நாதனிடமும், திருக் கண்ணபுரத்து சௌரிராஜப் பெருமாளிடமும், பேரன்பு கொண்டு ஒழுகியவர் இவர்.

அதனால், பட்டர் 'ஸ்ரீரங்கேச புரோஹித!' என்று புகழப்பட்டதைப்போல, 'திருக்கண்ணபுரம் சௌரிராஜப் பெருமாளுக்குப் புரோஹிதர்' என்ற சிறப்புப் பெயர் பெற்றார் வங்கிபுரத்து ஆச்சி.

இவருடைய வம்சத்தவர் தான் 'வங்கிபுரத்து நம்பிகள்' எனப்படுவர். இந்த வைணவப் பெருஞ்செல்வர் ரகசியத்திரயங்களுள் ஒன்றாய சாமசுலோகத்தை, அநுவாத சுலோகமாகக் கண்டவர். (அநுவாதம் – அறிந்ததொரு பொருளைத் திருப்பிச் சொல்வது)

பிறப்பிடப் பெயராலும், கைங்கரியச் சிறப்புப்பெயராலும், 'வங்கிபுரத்து ஆச்சி' எனப் போற்றி வழங்கப் பெறும் திருப்பெயரினர்தான்' 'பாசுரப்படி பாகவதம்' என்ற நூலுக்கு ஆசிரியர் ஆவார்.

'கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லால் மற்றும் கேட்பரோ?' என்ற நம்மாழ்வார் திருவாக்கின்படி, பாசுரப்படி பாகவதத்தைக் கேட்பவர்கள், கேசவன் (கண்ணன்) கீர்த்தியையும், திவ்யப்பிரபந்தப் பாசுரங்களையும் கேட்ட புண்ணியத்தைப் பெற்றவர்கள் ஆவார்கள்.

வரலாறு உதவியவர் சென்னை திரு. V. R. பிச்சுமணியும், அவரது ஆசிரியரும், அவர்களுக்கு நன்றி.

ஸ்ரீ:

வங்கிபுரத்துஆட்சி இயற்றிய

# பாசுரப்படி பாகவதம்

## பாற்கடல் வைபவம்

பாலாலிலேயில் துயில் கொண்ட பரமன்
மன்னிய நாகத்தணை மேலோர் மாமலைபொல்
சுடராழி சங்கிருபால் பொலிந்து தோன்றத்
திருமடந்தை மண்மடந்தை யிருபாலுந் திகழ
ஆயிரந்தோள் பரப்பி முடியாயிர மின்னிலகக்

கடலோதம் கால் அலைப்பக்
கடலோன் கைமிசைக் கண் வளர்வதுபோல்
உன்னிய யோகத்துறக்கம் தலைக்கொண்டு
இணையில்லா இன்னிசையாழ் கெழுமி இன்பத்
தும்புருவும் நாரதனு மிறைஞ்சி யேத்தக்

கொந்தலர்ந்த நறுந்துழாய் சாந்தம் தூபம்
தீபங் கொண்டமரர் தொழப்
பத்தர்களும் பகவர்களும் பழமொழிவாய் முனிவர்களும்
சித்தர்களும் தொழுதிறைஞ்ச
அருள் கொண்டாடும் அடியவரின்புற
ஏழுலகுந் தனிக்கோல் செல்ல வீற்றிருந்து.

## அவதார காரணம்

விண்கொள் அமரர்கள் வேதனை தீர
மண்ணுய்ய மண்ணுலகில் மனுசருய்யப்
பாரேறு பெரும் பாரந்தீரத்
துவரிக்கனிவாய் நிலமங்கை துயர்தீர

மண்ணின் பாரம் நீக்குதற்கே
வேண்டித் தேவரிரக்கச்
சாது சனத்தை நலியுங் கஞ்சனைச் சாதிப்பதற்கு
என்ன நோன்பு நோற்ருள் கொலோ இவனைப் பெற்ற
(வயிறுடையா ளென்னும் வார்த்தை யெய்துவிக்கத்)
தந்தை காலில் பெருவிலங்கு தாளவிழ

மக்களறுவரைக் கல்லிடை மோத இழந்த
தாயைக்குடல் விளக்கம் செய்யக்

## அவதாரம்

கதிராயிர மிரவி கலந்தெரித்தா லொத்த
மல்லை மூதூர் வடமதுரையில்
மத்தக்களிற்று வசுதேவர் தம்முடைச்

சித்தம் பிரியாத தேவகிதன் வயிற்றில்
அத்தத்தின் பத்தாநாள் தோன்றிக்
கஞ்சன் வலைவைத்தவன்று காரிருள் எல்லிற் பிழைத்து
எடுத்த பேராளன் நந்த கோபன்றனின் னுயிர்ச்
(சிறுவ னென்னக்
கூர்வேல் கொடுந் தொழிலன் நந்தகோபன் குமரனுய்த்

தெய்வ நங்கை யசோதைக்குப்
போத்தந்த பேதைக் குழவியாய்ப்
பலதேவற் கோர் கீழ்கன்ருய்
ஆயர்கள் நாயகனுய்
ஆயர்பாடிக்கு அணிவிளக்காய்க்

கொம்பனுர்க் கெல்லாம் கொழுந்துக்குங் கொழுந்தாய்க்
காண்டலின்றிக்
கொண்டு வளர்க்கக் குழவியாய்த்தான் வளர்ந்து

## ஆயர்பாடியில் மங்களங் கொண்டாடல்

எண்ணெய் சுண்ணம் எதிரெதிர் தூவிடப்
பாடுவார்களும் பல்பறை கொட்ட

அண்டர் மிண்டிப் புகுந்து நெய்யாட
அயலிடத்துப் பேர்ந்து
தத்துக்கொண்டாள் கொலோ! தானே பெற்ருள் கொலோ!
சித்த மனையாள் அசோதை யென்னப்
பேணிச்சீருடைப் பிள்ளை

ஒருத்தி மகனு யொளித்து வளரத்

## பூதனை வதம்

தீமத்தான் கஞ்சனது வஞ்சனையில் திரியும்
பெண்மை மிகு வடிவு கொடு
வன்பேய்ச்சி தன் மகனுகத்தான் முலையுண்ணக்கொடுக்க
முலையுண்பான் போலே முனிந்துண்டு

வஞ்சனத்து வந்த பேய்ச்சி யாவி பாலுள்வாங்கிச்
சூருருவின் பேயளவு கண்டு

## சகட பங்கம்

மாணிக்கங் கட்டி வயிர மிடை கட்டி
ஆணிப்பொன்ஞற் செய்த வண்ணச் சிறுத்தொட்டிலில்
உறங்குவான் போல கிடந்து

நாள்களோர் நாலைந்து திங்களளவிலே
தாளை நிமிர்த்து
உருளும் சகட முதைத்து

## கண்ணனுக்கு நாமகரணஞ் செய்தல்

—ஆய்ப் பாடியரயர்
பத்து நாளுங் கடந்த விரண்டா நாள்
எத்திசையும் சயமரங் கோடித்துக்
கருவடிவிற் செக்கண்ண வண்ணன்றன்னை
வேதம் வல்லார்களைக் கொண்டு
கார்முகிலே! யென் கண்ணு!
செங்கணெடுமால் சிரீதரா வென்றழைத்து
நாவினுல் நவிற்றின்ப மெய்த.

### *பால லீலைகள்*

மாயக் கூத்தன்
தன் முகத்துச்சுட்டி தூங்கத் தூங்கத் தவழ்ந்து போய்ப்
பொன்முகக் கிண்கிணியார்ப்பப் புழுதியளைந்து,
கோல நறும் பவளச் செந்துவர் வாயினிடைக்
கோமள வெள்ளி முளைப்போல் சில பல்லிலகக்
கணகணசிரித்து வந்து முன் வந்து
நின்று முத்தந்தந்து
ஆயர்கள் போரேறாய்ச் செங்கீரையாடி
எண்ணெய்க் குடத்தை யுருட்டி இளம்பிள்ளை கிள்ளி யெழுப்பிக்
கண்ணைப்புரட்டி விழித்துக் கழகண்டு செய்து,
வெண்ணெய் விழுங்கி விரைய வுறங்கி,
பானையிற் பாலைப் பருகிப் பற்றாதாரெல்லாஞ் சிரிப்ப
மடங்கொள் மதிமுகத்தாரை மால் செய்து.

அழகிய வாயிலமுத வூறல் தெளிவுறா
மழலை முற்றாத இளஞ்சொல்லால்
வானிலா வம்புலீ! சந்திரா! வாவென்று
அம்புலி விளித்து,

### யசோதை, பிள்ளைவாயுள் வையமேழுங் கண்டது.

மண்ணும் மலையும் கடலும் உலகேழும்
உண்ணுந் திறத்து மகிழ்ந்து
கையுங் காலும் நிமிர்த்துக் கடரா நீர்
பைய வாட்டிப் பசுஞ்சிறு மஞ்சளால்
ஐய நாவழுத்தாளுக்கு அங்காந்திட
வாயுள் வையமேழுங் காண
ஆடியாடி யசைந்தசைந்திட்டு அதனுக் கேற்ற
[ கூத்தையாடி

### யசோதை கண்ணனை உரலிற் கட்டுதல்

வாங்கக்குடம் நிறைக்கும் வள்ளல்பெரும் பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைக்க,
வெள்ளிமலை யிருந்தாலொத்த வெண்ணெயைத்
தாயர் மனங்கள் தடிப்ப

உளங்குளிர வமுது செய்து,
விரலோடு வாய் தோய்ந்த வெண்ணெய் கண்டு
ஒளியா வெண்ணெ யுண்டானென்று உரலோடு
[ ஆய்ச்சி ஒண்கயிற்றால்
விளியா ஆர்க்க ஆப்புண்டு விம்மியழுது.
பொத்த வுரலைக் கவிழ்த்து அதன்மேலேறித்,

தித்தித்த பாலும் தடாவினில் வெண்ணெயும்
மெத்தந் திருவயிறு ஆர விழுங்கி
சீரால் அசோதை
அன்புற்று நோக்கி யடித்தும் பிடித்தும் அனைவர்க்கும்
ஊரார்க ளெல்லாருங் காணக் [காட்ட

கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்டு
பெருமா வுரலில் பிணிப்புண்டிருந்து
விண்ணெல்லாங் கேட்க வழுது
எழில்கொள் தாம்பு கொண்டடிப்பதற்கு எள்கி,

## மருத மரங்களை முறித்தது

மணமருவு தோளாய்ச்சி ஆர்க்கப் போய் உரலோடும்
ஒருங்கொத்த இணைமருதம் உன்னிய வந்தவரை
ஊருகரத்தினொடும் உந்தி
எண்டிசையோரும் வணங்க
இணை மருதூடு நடந்திட்டு,

## மாடு கன்றுகளை மேய்த்தல்

அழகிய பைம்பொன்னின் கோல் அங்கைக்கொண்டு
கழல்கள் சதங்கை கலந்தெங்கும் ஆர்ப்ப
மழகன்றினங்கள் மறித்துத் திரிந்து,
புகழ்ப் பலதேவனென்னும் தன்நம்பி யோடப் பின்
[கூடச் சென்று
தன்நேர் ஆயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டு,
வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு
[அதனோசை கேட்டு

அசல் அகத்தார் பரிபவம் பேச
இல்லம் புகுந்தவர் மகளைக்கூவிக் கையில் வளையைக்
[கழற்றிக் கொண்டு

கொல்லையினின்றுங் கொணர்ந்து விற்ற அங்கொருத்திக்கு
[அவ்வளை கொடுத்து
நல்லன நாவற் பழங்கள் கொண்டு
கறவைகள் பின் சென்று கானஞ்சேர்ந்துண்டு

இட்டமான பசுக்களை இனிது மறித்து நீரூட்டி
விட்டுக்கொண்டு விளையாடி
கணங்களோடு மின்மேகங் கலந்தாற்போல் வனமாலை
மினுங்க நின்று விளையாடி
கோவலனாய் ஆநிரைகள் மேய்த்துக் குழலூதிக்

கோவிந்தன் வருகிற கூட்டங் கண்டு
மழை கொலோ வருகின்றதென்று சொல்லி
[மங்கைமார் சாலக வாசல் பற்றி
[நுழைய குழல்களுங் கீதமுமாகி
முற்றத்தூடு புகுந்து தன்முகங் காட்டி புன்முறுவல்
[செய்து
பஞ்சிய மெல்லடிப் பிள்ளைகளுடன்
வைத்த நெய்யுங் காய்ந்த பாலும் வடிதயிரும் நறு
[வெண்ணெயு மித்தனையும் பெற்றறியாமே

ஆயிரநாழி நெய்யைப் பாகந்தான்
வையாதுண்டு;

## வத்ஸாஸுர பகாஸுர வதம்

கானக வல்விளவின் காயுதிரக் கருதிக்
கன்றது கொண்டெறிந்து,
பள்ளத்தில் மேயும் பறவையுருக் கொண்டு
கள்ளவசுரன் வருவானைத்தான் கண்டு
புள்ளிதுவென்று பொதுக்கோ வாய் கீண்டிட்டு

### தேனுகாசுர வதம்

வாசியாகி நேசமின்றி வந்தெதிர்ந்த தேனுகன்
நாசமாகி நாளுலப்ப நன்மைசேர் பனங்கனிக்கு
வீசிமேல் நிமிர்ந்த றோளின் இல்லையாக்கி,

### காளிங்க நர்த்தனம்

ஆய்ச்சிமார்களும் ஆயரும் அஞ்சிடப்
பூத்த நீள் கடம்பேறித்
தடம்படு தாமரைப் பொய்கை கலக்கி
விடம்படு நாகத்தை வால்பற்றி யீர்த்துப்
படம்படு பைந்தலை மேலெழப் பாய்ந்திட்டு

உடம்பை யசைத்து
வேயின் குழலூதி வித்தகனாய் நின்று
நீண்முடி யைந்திலும் நின்று நடஞ்செய்து

### பிரலம்ப வதம்

பாண்டி வடத்தில்
பிலம்பன்றன்னைப் பண்ணழியப் பலதேவன் வெல்ல

### கண்ணன் காட்டுத் தீயை விழுங்கல்

நின்ற செந்தீமொண்டு சூறை நீள்விசும்பூடு இரியக்
காண்கின்ற வெந்தீயெல்லாம் யானே யென்று
தான் விழுங்கி யுய்யக் கொண்டு.

### கண்ணன் வேணுகானஞ் செய்தல்

வள்ளி நுடங்கிடை மாதர் வந்தலர் தூற்றிடத்
துள்ளி விளையாடித் தோழரோடு

கானகம்படி யுலாவி யுலாவிச்
சிறுவிரல்கள் தடவிப் பரிமாறச் செங்கண் கோடச்
[செய்யவால் கொப்பளிப்பக்
குறுவெயர்ப் புருவம் கூடலிப்பக்
கோவலர் சிறுமிய ரிளங்கொங்கை குதுகலிப்ப
மேனகையொடு திலோத்தமை யரம்பை
[உருப்பசியரவர் வெள்கி மயங்கி
நன்னரம்புடைய தும்புருவோடு நாரதனும் தந்தம்
வீணை மறப்பப்
பறவையின் கணங்கள் கூடு துறந்து வந்து சூழ்ந்து
[படுகாடு கிடப்பக்
கறவையின் கணங்கள் கால் பரப்பிட்டுக் கவிழ்ந்திறங்க
மருண்ட மான்கணங்கள் மேய்கை மறந்து மேய்ந்த
[புல்லுங் கடைவாய் வழிசோர
இரண்டு பாடும் துலுங்காப் புடை பெயரா
எழுது சித்திரங்கள் போல நிற்க
மரங்கள் நின்று மதுதாரைகள் பாய
மலர்கள் வீழ வளர்கொம்புகள் தாழக்
கோவிந்தனுடைய கோமள வாயில்
குழல் முழஞ்சுகளினூடு குமிழ்த்துக்
கொழித்திழிந்த அமுதப்புனல் தன்னை
குழல் முழவம் விளம்பக் கோவலனாய்க் குழலூதியூதி.

## கோபியர் வஸ்திராபஹரணம்

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளில்
கோழி யழைப்பதன் முன்னம் குடைந்து நீராடுவான்
[போந்த
பங்கய நீர் குடைந்தாடுகின்றார்கள் ஆயர்
[மடமக்களைப் பின்னே சென்றொளித்திருந்து

அங்கவர் பூந்துகில் வாரிக்கொண்டிட்டு அரவேரிடை
[யார் இரப்ப
மங்கை நல்லீர் வந்து கொண்மினென்று மரமேறி
[யிருந்து
கன்னியரோடு எங்கள் நம்பி கரிய பிரான் விளையாடி,

## வேள்வி மங்கையர் போக்கியான்னம் சமர்ப்பித்தது

பத்த விலோசனத்தில்
வேர்த்துப் பசித்து வயிறசைந்து வேண்டடி சிலுண்டு

## கோவர்த்தனத்தைக் குடையாக எடுத்தது

இந்திரனுக் கென்று ஆயர்களெடுத்த எழில் விழவில்
[பழ நடைசெய்
மந்திர விதியில் பூசனை பெறாது
இமயப் பெருமலை போல்
அமைத்த சோறது வெல்லாம்
போயிருந்தங் கொரு பூதவடிவு கொண்டு

முற்ற வாரி வளைத்துண்ண,
மேலை யமரர்பதி மிக்கு வெகுண்டுவர
காளநன் மேகமவை கல்லொடு கார்பொழிய
வண்ணமால் வரையே குடையாகச்
செந்தாமரைக்கை விரலைந்தினையும்

கப்பாக மடுத்து மணி நெடுந்தோள்
காம்பாகக் கொடுத்துக்
கல்லெடுத்துக் கன்மாரி காத்து.

## கண்ணன் கோபியரோடு விளையாடல்

மங்கல நல் வனமாலை மார்வில் இலங்க மயில் தழைப்
(பீலி சூடிப்
பொங்கிளவாடை யரையிற் சாத்திப் பூங் கொத்துக்
(காதிற் புணரப் பெய்து

கொங்கு நறுங்குழலார்களோடு குழைந்து குழலினி
கொல்லைமை செய்து குரவை பிணைந்து, (தூதி,
சுழலக் குடங்கள் தலை மீதெடுத்துக் கொண்டாடி.
மன்றமரக் கூத்தாடி மகிழ்ந்து
தேனும் பாலுங் கன்னலும் அமுதாகித் தித்தித்து,
முற்றா இளையார் விளையாட்டொடு
காதல் வெள்ளம் விளைவித்து

## கேசி வதம்

மாவாயின் அங்கம் மதியாது கீறி.

## கண்ணனும் பலராமனும் மதுரைக்கு எழுந்தருளல்

வில்லார் விழவில் மதுரை விரும்பி

## கூனியினுடைய கூனலை நிமிர்த்தல்

நாறிய சாந்தம் நமகிக்கிறை நல்கென்னத்
தேறி அவளும் திருவுடம்பில் பூச
ஊறிய கூனினை உள்ளொடுங்க அன்று ஏற வுருவி

## குவலாயபீட வதம்

விற்பிடித்திறுத்து,
வளவெழுந் தவளமாட மதுரைமா நகரந் தன்னுள்
வெம்பு சினத்து அடல்வேழம் வீழ
வெண் மருப்பு ஒன்று பறித்து,

## மல்லர் வதம்

இருமலை போல் எதிர்ந்த மல்லர் இருவர்
வலிய முடியிடிய வாங்கி

## கம்ஸ வதம்

செம்பொனிலங்கு வலங்கை வாளி
திண்சிலை தண்டொடு சங்க மொள்வாள்

உம்பரிரு சுடராழியோடு
கேடக மொண்மலர் பற்றித்
தொட்ட படை யெட்டும் தோலாத வென்றியான்
கறுத்திட்டெதிர் நின்ற
கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்று

அரையனை எழப் பாய்ந்துதைத்துக்
குஞ்சி பிடித்தடித்து
உயிரது வுண்டு
அவன் மாளக் கண்டு

## சாந்தீபினியின் புத்திரனை மீட்டுக் கொடுத்தது

மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை
ஓதுவித்த தக்கணையா விருவுருவே கொடுத்து,

## ருக்குமணி பரிணயம்

கண்ணாலங் கோடித்துக் கன்னி தன்னைக் கைப்பிடிப்பான்
திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து
அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்து
உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக் கொண்டு

விருப்புற்று அங்கேக விரைந் தெதிர்வந்து
செருக்குற்றான் வீரம் சிதையத் தலையைச் சிரைத்து
அன்று அங்கு அமர் வென்று நங்கையணி
(நெடுந்தோள் புணர்ந்து
ஏடிலங்கு தாமரை போற் செவ்வாய் முறுவல் செய்தருளித்
திருவுக்கும் திருவாகிய செல்வனாய்ப்
பெண்ணமுதுண்டு,

## *ஏழ்விடை செற்றுப் பின்னையை மணந்தது*

துப்புடையாயர்கள் தம் சொல் வழுவாதொரு கால்
தூயகருங் குழல் நல்தோகை மயிலனைய
நப்பினை தன் திறமா நல்விடை யேழவிய
வீயப் பொருது வியர்த்து நின்று,

## *நரகாசுர வதம்*

மன்னு நரகன் தன்னைச் சூழ்போகி வளைத் தெறிந்து
கன்னி மகளிர் தம்மைக் கவர்ந்து,

## *துவாரகை ஏற்படுத்தியது*

பதினாறாம் ஆயிரவர் தேவிமார் பணிசெய்யத் துவரையென்னும்
அதில் நாயகராகி வீற்றிருந்து,

## *பாரிஜாதாபஹரணம்*

என்னாதன் தேவிக்கு அன்று இன்பப்பூ ஈயாதாள்
தன்னாதன் காணவே தண்பூ மரத்தினை
வல்நாதப் புள்ளால் வலியப் பறித்துக்
கற்பகக்காவு கருதியகாதலிக்கு
இப்பொழுது ஈவனென்று இந்திரன் காவினில்
நிற்பன செய்து நிலாத்திகழ் முற்றத்துள்
உய்த்து,

## வாணனாயிரந் தோள் துணித்தது

மாவலி தன்னுடைய மகன்வாணன் மகளிருந்த
காவலைக் கட்டழித்துப்
பரிவின்றி வாணனைக் காத்துமென்று அன்று படை
(யொடும் வந்தெதிர்ந்த
திருபுரஞ் செற்றவனும் மகனும் பின்னும் அங்கியும்
(போர் தொலையப்
பொரு சிறைப்புள்ளைக் கடாவிப்
பொருகடலை யரண் கடந்துபுக்கு
மாயப் பொருபடை வாணனை ஆயிரந்தோளும் பொழிகுருதி
பாய ஆழி சுழற்றி,

## பௌண்ட்ரக வாசுதேவ பங்கம்

புகராருருவாகி முனிந்தவனைப் புகழ்வீட முனிந்து
(உயிருண்டு அசுரன்
நகராயின பாழ்பட நாமமெறிந்து
காய் சினத்த காசி மன்னன்
நாச முற்று வீழ நாள் கவர்ந்து,

## சிசுபால வதம்

கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளே வையும்
சேட்பாற் பழம் பகைவன் சிசுபாலன் திருவடி
(தாட் பாலடையப்
பெருந்துன்பம் வேரற நீக்கித்தன் தாளிணைக்கீழ்ச்
(சேர்த்துப்

## தந்த வக்கரனை முடித்தல்

பொங்கரவ வக்கரனைக் கொன்று,

## திரௌபதி கண்ணனைச் சரணமடைதல்

அந்தகன்சிறுவன் அரசர்தமரசற் கிளையவன்
(அணியிழையைச் சென்று
"எந்தமைக்கு ரிமை செய்" எனத்தரியாது
("எம்பெருமான்! அருள்" என்ன

## கண்ணன் விசுவ ரூபமெடுத்தது

பங்கயக் கண்ணன்
ஒன்றே யுரைப்பான் ஒரு சொல்லே சொல்லுவான்
துன்று முடியான் துரியோதனன் பக்கல் சென்று,
கோதை வேல் ஐவர்க்காய் மண்ணகலம் கூறிடுவான்
தூதனாய் மன்னவனாற் சொல்லுண்டு,
அரவு நீள் கொடியோன் அவையுள் ஆசனத்தை
(யஞ்சிடாதேயிட அதற்குப்
பெரிய மாமேனி யண்டம் ஊடுருவப் பெருந்திசை
(யடங்கிட நிமிர்ந்து
ஊரொன்று வேண்டிப் பெறாத வுரோடத்தால்
மண்மிசைப் பெரும்பாரம் தீங்கவோர் பாரதமா
[யெரும்போரில்

## பார்த்தன், தேரில் கண்ணன் பாகனாய் நின்றது

பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு பார்த்தன்
[தன் தேர்முன் நின்று

## அர்ச்சுனன். கண்ணனது சேவடிமேல் அர்ச்சித்த பூவைச் சிவபிரான் முடியிற் கண்டது

தீர்த்தனுலகளந்த சேவடி மேற் பூந்தாமம்
சேர்த்தி அவையே சிவன்முடிமேல் தான் கண்டு
பார்த்தன் தெளிந்தொழிய

## கீதையுபதேசம்

அறிவினாற் குறைவில்லா அகன்ஞாலத் தவரறிய
நெறியெல்லா மெடுத்துரைத்து
நீர்மையில் நூற்றுவர்வீய ஐவர்க்கருள் செய்து நின்று.

## ஜயத்திரதனை மடித்தது

ஆழி கொண்டன்று இரவி மறைப்பச் சயத்திரதன்
தலையைப்
பாழிலுருளப் படைபொருது.

## பரிட்சித்தை உயிர் மீட்டருளியது

மருமகன் தன் சந்ததியை உயிர்மீட்டு மைத்துனன்மார்
உருமகத்தே வீழாமே குருமுகமாய்க் காத்து,
எல்லாச் சேனையும் இரு நிலத்து அவித்து
சந்தம் அல்குழலாள் அலககண் நூற்றுவர் தம்
[பெண்டிருமெய்தி நூலிழப்ப,
மைத்துனன்மார் காதலியை மயிர் முடிப்பித்து
[அவர்களையே மன்னராக்கி,

## வைதிகன் பிள்ளைகளை மீட்டுக் கொடுத்தல்

வேதவாய் மொழியந்தணன் ஒருவன்
['எந்தை நின் சரண். என்னுடைய மனைவி
காதல் மக்களைப் பயத்தலும் காணாள் கடிய தெய்வங்
[கொண்டொளிக்கும்' என்றழைப்ப,
இடரின்றியே ஒருநாள் ஒருபோழ்தில் எல்லாவுலகுங் கழியப்
படர்புகழ்ப் பார்த்தனும் வைதிகனும் உடனேறத்
[திண்தேர் கடவிச்
சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியி
[வைதிகன் பிள்ளைகளை
உடலொடுங் கொண்டு கொடுத்து.

## ஆதியஞ் சோதி யுருச்சேர்தல்

துயரில் சுடரொளி தன்னுடைச் சோதி நின்ற
[வண்ணம் நிற்கவே
துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக்
[கண்காண வந்து
துயரங்கள் செய்து தன் தெய்வ நிலையுலகிற்
கதையின் திருமொழியாய் நின்று. [புகவுய்த்துக்
நல்குரவும் செல்வும் நரகும் சுவர்க்கமுமாய்
வெல்பகையும் நட்பும் விடமும் அமுதமுமாய்ப்
பல் வகையும் பரந்து
வைகுந்தம் புகுதலும்,
என்மர் பதினொருவர் ஈராறுவர் ஓரிருவர்
வண்ண மலரேந்தி வைகலும் நண்ணி
ஒரு மாலையால் பரவி ஓவாது எப்போதும்
மால்வண்ணன் தாள் தாமரை யடைவோமென்று
மறை கொண்ட மந்திரத்தால் வாழ்த்திச்
சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி
ஏதமில் தண்ணுமை எக்கம் மத்தளி
யாழ்குழல் முழவமோடு இசை திசை கெழுமிக்
கீதங்கள் பாடி மயங்கித் திருவடி தொழ,
பாடுநல் வேதவொலி பரவைத்திரை போல் முழங்க
ஆயிரம் பெயரால் அமரர் சென்றிறைஞ்ச,
உவந்த உள்ளத்தனாய்
அண்டமாய் எண்டிசைக்கும் ஆதியாய் நீதியான
பண்டமாம் பரம சோதியாய்
ஆடரவமளியில் அறிதுயிலமர,
இடங்கொள் சமயத்தை யெல்லாம் எடுத்துக்
[களைவன போலே

தடங்கடல் பள்ளிப்பெருமான் தன்னுடைப்
[பூதங்களேயாய்க்
கிடந்து மிருந்தும் எழுந்தும் கீதம் பல பல பாடி
நடந்தும் பறந்தும் குனித்தும் நாடகம் செய்கின்றனவே,



தோட்டலர் பைந்தார்ச் சுடர்முடியானைத்
தொழுது நன்மொழியால் தொகுத்துரைத்த
பாட்டிவை பாடப் பத்திமை பெருகிச்
சித்தமும் திருவொடு மிகுமே.

பொலிக பொலிக பொலிக !

ஸ்ரீ:

# திவ்யப் பிரபந்தப் பாசுரப்படி

# இராமாயணம்

*[ பெரியவாச்சான் பிள்ளை ]*

ஆழ்வார்கள் அருளிச் செய்த நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்திற்கு, வியாக்கியானங்கள் அருளிய ஆச்சாரியர்கள் பலர். அவர்களுள் வியாக்கியானச் சக்ரவர்த்தி என்று பெரியோர்களால் போற்றிப் பாராட்டத்தக்கவர் 'பெரியவாச்சான் பிள்ளை' என்ற திருநாமத்தினராவர். இவர் ஸ்ரீமத் இராமாயணத்திலும், திவ்யப் பிரபந்தத்திலும் பெரிதும் ஈடுபாடு கொண்டவர். நம்மாழ்வார் அருளிச் செய்த 'திருவாய் மொழிக்கு' இவர் அருளிய வியாக்கியானம் 'இருபத்து நாலாயிரப்படி' என்ற பெயர் பெறும். வியாக்கியானத்தின் இந்தப் பெயரே, இவரது இராமாயண ஈடுபாட்டைக் காட்டும், வான்மீகி பகவான் பாடிய ஸ்ரீமத் இராமாயணம் 'இருபத்து நாலாயிரம்' சுலோகங்களைக் கொண்டதாகும். இந்த ஈடுபாட்டினால் ஆசாரியார், தம் வியாக்கியானத்தையும் 'இருபத்து நாலாயிரப்படியாக ஆக்கி உள்ளார். மேலும் வால்மீகி அருளிய ஸ்ரீமத் இராமாயனத்தில், சில முக்கியமான சுலோகங்களை எடுத்துக்கொண்டு அவற்றிற்கு, அருமையான வியாக்கியானம் தந்துள்ளார்கள். இவரது இந்த வியாக்கியானங்கள்; இவருடைய, இராமாயணம், பிரபந்தம், ஈடுபாட்டைத் தெளிவாகக் காட்டுகின்றன.

'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற பெரு நோக்கினர் தான் சான்றோர்களாகத் திகழ்வார்கள். அத்தகையதோர் சான்றாண்மை இவர் உள்ளத்தை

ஆட்கொண்டதன் பயனாகத்தான், இந்த இராமாயணம் உருவாகியது.

'மாக்களை, மக்களாக மாற்றி, பக்தர்களாக உயர்த்துவதற்கு உதவுவது இராமாயணமும், பிரபந்தமும் ஆகும்' என்பதை நன்கு உணர்ந்தவர் பெரியவாச்சான் பிள்ளை. இந்த நன்நோக்கத்தோடு, நாலாயிரத் திவ்யப்பிரபந்தத்திற்குள் நுழைந்தார்; ஆழ்வார்களது அருளிச் செயல்களில் இராமாயண நிகழ்ச்சிகள் ஆங்காங்கே அமைந்து கிடப்பதைக் கண்டார்; அதனை எல்லாம் ஒன்றாகத் தொகுத்தார்; காண்டவாரியாக வகுத்தார்; கதை நிகழ்ச்சிகளை வரிசைப் படுத்தி, புது இராமாயணம் ஒன்றை உருவாக்கினார். அதுவே பாசுரப்படி இராமாயணம் ஆகும்.

இந்த இராமாயணம், ஆழ்வார்களது அமுது ஒழுகின்ற அருந்தமிழ்ச் சொற்களாலேயே அமைந்ததாகும். அதனால் இதனைப் படிப்பவர்கள், ஒரே சமயத்தில் இராமாயணத்தையும் திவ்யப்பிரபந்தத்தையும் அனுபவித்து இன்புற்றவர்கள் ஆவார்கள். நாள்தோறும் இதனைப் பாராயணம் செய்து, பக்தர்களாக உயர்ந்து பகவான் அருளைப் பெறலாம்.

பாராயணம் செய்க.

ஸ்ரீ:

திவ்யப் பிரபந்தப் பாசுரப்படி இராமாயணம்

[ பெரியவாச்சான் பிள்ளை ]

# 1. பால காண்டம்

திரு மடந்தை, மண் மடந்தை இருபாலும் திகழ. நலம் அந்தம் இல்லது ஓர் நாட்டில், அந்தம் இல் பேரின் பத்து அடியரோடு, ஏழ் உலகும் தனிக் கோல் செல்ல, வீற்றிருக்கும், அயர்வு அறும் அமரர்கள் அதிபதியான அணி ஆர் பொழில் சூழ் அரங்க-நகர் அப்பன், அலை நீர்க் கடலுள் அழுந்தும் நாவாய்போல் ஆவார் ஆர் துணை என்று துளங்கும் நல் அமரர் துயர் தீர, வல் அரக்கர் வாழ் இலங்கைப் பாழ்படுக்க எண்ணி; மண் உலகத்தோர் உய்ய, அயோத்தி என்னும் அணி நகரத்து வெங்கதிரோன் குலத்துக்கு ஓர் விளக்கு ஆய்; கௌசலை தன் குல மதலை ஆய்; தயரதன்தன் மகன் ஆய்த் தோன்றி; குணம் திகழ் கொண்டல் ஆய்; மந்திரம்கொள் மறை முனிவன் வேள்வி காக்க நடந்து வந்து; தனை எதிர்த்தத் தாடகைதன் உரம் கீண்டு; வல் அரக்கர் உயிர் உண்டு; கல்லைப் பெண் ஆக்கி; கார் ஆர் திண் சிலை இறுத்து; மைதிலியை மணம் புணர்ந்து; இரு பத்து ஒருகால் அரசு களை கட்ட மழு வாளி வெவ்வரி நல் சிலை வாங்கி வென்றி கொண்டு; அவன் தவத்தை முற்றும் செற்று; அம் பொன் நெடு மணி மாட அயோத்தி எய்தி; அரி அணைமேல் மன்னன் ஆவான். நிற்க :

# 2. அயோத்தியாக் காண்டம்

கொங்கை வன் கூனி சொல் கொண்ட கொடிய' கைகேயி வரம் வேண்ட, அக் கடிய சொல் கேட்டு மலக்கிய மா மனத்தனன் ஆய், மன்னவனும் மறாது ஒழிய, 'குலக் குமரா! காடு உறையப்போ' என்று விடை கொடுப்ப, இந் நிலத்தை வேண்டாது; ஈன்று எடுத்தத் தாயாரையும், இராச்சியமும் ஆங்கு ஒழிந்து; மைவாய களிறு ஒழிந்து; மா ஒழிந்து: தேர் ஒழிந்து; கலன் அணியாதே; காமர் எழில் விழல் உடுத்து; அங்கங்கள் அழகு மாறி; மான் அமரும் மென் நோக்கி வைதேவி இன் துணையர; இளங் கோவும் வாளும் வில்லும் கொண்டு பின் செல்ல; கலை யும் கரியும் பரிமாவும் திரியும் கானம் கடந்து போய்; பத்தி உடைக் குகன் கடத்த, கங்கை தன்னைக் கடந்து; வனம் போய்ப் புக்கு; காயோடு நீடு கனி உண்டு; வியன் கான மரத்தின் நீழல், கல் அணைமேல், கண் துயின்று, சித்திரக் கூடத்து இருப்ப; தயரதன்-தான், 'நின் மகன் மேல் பழி விளைத்திட்டு, என்னையும் நீள் வானில் போக்க. என் பெற்றாய்? கைகேசி! நானும் வானகமே போகின்றேன்' என்று, வான் ஏற, தேன் அமரும் பொழில் சாரல் சித்திரக் கூடத்து, ஆனை, புரவி, தேரோடு, கால் – ஆள் அணி கொண்ட சேனை, சுமந்திரன், வசிட்டருடன் பரத நம்பி பணிய, தம்பிக்கு மரவடியை வான் பணையம் வைத்து; குவலயத்துங்கக் கரியும், பரியும், இராச்சியமும் எங்கும் பரதற்கு அருளி; விடை கொடுத்து; திரு உடைய திசைக் கருமம் திருத்தப்போய்; தண்டகாரணியம் புகுந்து.

# 3. ஆரணிய காண்டம்

மறை முனிவர்க்கு 'அஞ்சேல்மின்' என்று அருள் கொடுத்து; வெங் கண் விறல் விராதன் உக, வில் குனித்து; வண் தமிழ் மா முனி கொடுத்த வரி வில் வாங்கி; புலர்ந்து எழுந்தக் காமத்தால், 'சீதைக்கு நேர் ஆவன்' என்ற, பொன் நிறம் கொண்ட சுடு சினத்த சூர்ப்பணகி கொடி மூக்கும் காது இரண்டும் கூர் ஆர்த்த வாளால் ஈரா விடுத்து; கரனோடு தூடணன் – தன் உயிரை வாங்கி; அவள் கதறி. தலையில் அம் கை வைத்து, மலை இலங்கை ஓடிப் புக; கொடுமையின் சுடு விசை அரக்கன், அலை மலி வேல் கணாளை அகல்விப்பான், ஓர் உரு ஆய மானை அமைத்து, செங்கல் பொடிக் கூறை, சிற்றெயிற்று, முற்றல் மூங்கில் மூன்று தண்டத்தன் ஆய், வஞ்சித்து இலைக் குரம் பில் தனி இருப்பில் கனிவாய்த் திருவினைப் பிரித்து, நீள் கடல் சூழ் இலங்கையில் அரக்கர் குடிக்கு நஞ்சு ஆகக் கொண்டு போய், வம்பு உலாம் கடி காவில் சிறையா வைக்க; அயோத்தியர் கோன் மாய மான் மாயச் செற்று; அலை மலி வேல்-கண்ணாளை அகன்று, தளர்வு எய்தி; சடாயுவை வைகுந்தத்து ஏற்றி; கங்குலும் பகலும் கண் துயில் இல்லாக் கானகம் படி உலாவி; கணை ஒன்றினால் கவந் மடித்து; சவரி தந்தக் கனி உவந்து;

# 4. கிட்கிந்தா காண்டம்

வன மருவி கவி அரசன் காதல் கொண்டு; மரா மரம் ஏழ் எய்து; உருத்து எழு வாலி மார்பில் ஒரு கணை உருவ ஓட்டி; கருத்துடைத் தம்பிக்கு இன்பக் கதிர்முடி அரசு அளித்து; வானரக் கோனுடன் இனிது இருந்து, வைதேகி-தனைத்தேட விடுத்தத் திசைக் கருமம் திருத்தத், திறல் விளங்கு மாருதியும் மாயோன் தூது உரைத்தல் செப்ப;

# 5. சுந்தர காண்டம்

சீர் ஆரும் திறல் அனுமன் மா கடலைக் கடந்து ஏறி, மும் மதில் நீள் இலங்கைப் புக்குக், கடி காவில் வார் ஆரும் முலை மடவாள் வைதேவி—தனைக் கண்டு, 'நின் அடியேன் விண்ணப்பம் கேட்டருளுவாய்; அயோத்தி—தனில் ஓர் இட வகையில் எல்லியம்போது இனிது இருத்தல், மல்லிகை மா மாலை கொண்டு அங்கு ஆர்த்ததும்; கலக்கிய மா மனத்தினள் ஆயகைகேயி வரம் வேண்ட, சிலக்கிய மா மனத்தனன் ஆய் மன்னவனும் மறாது ஒழிய, 'குலக்குமரா! காடு உரையப்போ' என்று விடை கொடுப்ப, இலக்குமணன்—தன்னொடும் அங்கு ஏகியதும்; கங்கை தன்னில் கூர் அணிந்த வேல் வலவன் குகனொடு சீர் அணிந்த தோழமை கொண்டதுவும்; சித்திரகூடத்து இருப்பப் பரத நம்பி பணிந்ததுவும்; சிறு காக்கை முலைத் தீண்ட மூவுலகும் திரிந்து ஓடி, 'வித்தகனே! இராமா! ஓ! நின் அபயம்' என்ன, அத்திரமே அதன் கண்ணை அறுத்ததுவும்; பொன் ஒத்த மான் ஒன்று புகுந்து. இனிது விளையாட, நின் அன்பின் வழி நின்று, சிலைப் பிடித்து, எம்பிரான் ஏக. பின்னே அங்கு இலக்குமணன் பிரிந்ததுவும்; அயோத்தியர்—கோன் உரைத்த அடையாளம், ஈது அவன் கை மோதிரம்' என்று அடையாளம் தெரிந்து உரைக்க, மலர்க் குழலாள் சீதையும் வில் இறுத்தான் மோதிரம் கொண்டு, 'அனுமான்! அடையாளம் ஒக்கும்' என்று உச்சி மேல் வைத்து உகக்க, திறல் விளங்கு மாருதியும் இலங்கையர்—கோன் மாக்கடி காவை இறுத்து, காதல் மக்களும் சுற்றமும் கொன்று, கடி இலங்கை மலங்க எரித்து, அரக்கர்-கோன் சினம் அழித்து மீண்டு, அன்பினால் அயோத்தியர்-கோன் தளிர் புரையும் அடி—இணைப் பணிய ;

# 6. யுத்த காண்டம்

காண எண்கும் குரங்கும் முகவும் படையா, கொடியோ இலங்கை புகல் உற்று; அலை ஆர் கடற்கரை வீற்றிருந்து; செல்வ விபீடணற்கு நல்லன் ஆய்; விரி நீர் இலங்கை அருளி; சரண்புக்கக் குறை கடலை அடல் அம்பால் மறுக எய்து; கொல்லை விலங்குப் புணி செய்ய, மலையால் அணைக் கட்டி; மறு கரை ஏறி; இலங்கை பொடி ஆக. சிலை மலி செஞ் சரங்கள் செல உய்த்து; கும்பனோடு நிகும்பனும் பட, இந்திரசித்து அழிய, கும்பகர்ணன் பட, அரக்கர் ஆவி மாள, அரக்கர் கூத்தர் போலக் குழமணி தூரம் ஆட, இலங்கை மன்னன் முடி ஒருபதும் தோள் இருபதும் போய் உதிர, சிலைவளைத்து; சரமழை பொழிந்து; கரம் துணித்து; வென்றி கொண்ட செருக்களத்துக் கடிக் கமல நான் முகனும், கண்மூன்றத்தானும், எண்மர், பதினொருவர், ஈர் அறுவர், ஓர் இருவர், மற்றும் உள்ள வானவர் மலர் மழை பொழிந்து, மணிமுடி பணிதர, அடி—இணை வணங்க கோலத் திரு மா மகளொடு, செல்வ விபீடணன், வானரக் கோனுடன் இலங்கு மணி நெடுந் தேர் ஏறி; கீர் அணிந்த குகனோடு கூடி; அங்கண் நெடு மதில் புடைசூழ் அயோத்தி எய்தி; நல் நீர் ஆடி; பொங்கு இள ஆடை அரையில் சாத்தி; திருச் செய்ய முடியும், ஆரமும், குழையும் முதலா மேதகு பல்கலன் அணிந்து; சூட்டு நன் மாலைகள் அணிந்து; பரதனும், தம்பி சத்துருக்கணனும், இலக்குமனும், இரவும் நன் பகலும், ஆட்செய்ய, வடிவு இணை இல்லாச் சங்கு தங்கு முன்கை நங்கை மலர் குழலாள் சீதையும், தானும் கோப்புடைய சீரிய சிங்காசனத்து இருந்து; ஏழ் உலகும் தனிக் கோல் செல்ல வாழ்வித்தருளினார்.

ஸ்ரீ:

# திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ரகசியம்

திவ்யப் பிரபந்தத்துள் அடங்கியிருப்பன இருபத்து நான்கு பிரபந்தங்களாகும். அவற்றுள் நான்கு பிரபந்தங்களை அருளியவர் நம்மாழ்வார். 'திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி' என்ற நான்குப் பிரபந்தங்களும் நான்கு வேதங்களின் சாரம் என்பது சான்றோர்களது கொள்கை.

ஆழ்வார், ஆண்டவனோடு அனுபவித்த அனுபவங்கள் பலவற்றை, திருவாய்மொழியில் அருளியுள்ளார்கள். அந்த அனுபவங்களுள் ஒன்று 'தலைவன் தலைவி' என்ற அகப்பொருள் துறையாகும். இத்துறையில் அமைந்தப் பாசுரங்கள் 'அகப்பொருள் பாசுரம்' எனப்படும். தலைவி, தோழி, தாயார் என்பவர்கள் பேசுவதாக அமைந்த பாசுரங்கள் இந்த அமைப்பினுள் அடங்கும். தாயார் பாசுரமாக அமைந்திருப்பது திருக்கோளூர்ப் பதிகமாகும்.

நம்மாழ்வாராகியத் தலைவி, பெருமாளாகியத் தலைவனோடு கலக்க வேண்டும் என்ற பெரிய விருப்பம் கொண்டவளாக இருக்கின்றாள். இந்த விருப்பம் நிறைவேறுவதற்கு உதவி செய்பவர்களாக வீட்டில் யாரும் இல்லை. அதனால், இந்தத் தலைவி, தன் தலைவனைப் பெறுவதற்காக, அவன், திருவுருவம் கொண்டு வீற்றிருக்கும் திருக்கோளூரை நோக்கிப் புறப்பட்டு விட்டாள். தலைவியின் தாயாரைப்பார்த்து, அயல்வீட்டினர் 'உன் மகள் எங்கே?' என்று கேட்கின்றார்கள். என் மகள் புகும் ஊர் திருக்கோளூரே' என்று பதில் கொடுக்கிறாள் தலைவியின் தாய். இப்படி, தாயார் பாசுரங்களாக அமைந்திருக்கின்றப் பத்துப் பாசுரங்களும், ஆச்சாரியார்கள் உள்ளத்தைக் கவர்ந்தவைவாகும்.

வைணவ ஆச்சாரியார்களுள் தலை சிறந்தவராக விளங்குபவர் எம்பெருமானார்–இராமானுஜர் ஆவார். இவர், திருவாய்மொழிப் பாசுரங்களில் மூழ்கித் திளைத்து, அனுபவித்து அனுபவித்து இன்புறுவர். திருக்கோளூர்ப் பதிகத்தைப் படித்ததும் 'புகும்ஊர் திருக்கோளூரே' என்ற தொடர், இராமானுஜர் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது. அதனால், திருக்கோளூர் சென்று அங்குப் புகலாம் என்று புறப்பட்டார்.

திருக்கோளூர், பாண்டி நாட்டில் (திருநெல்வேலி மாவட்டத்தில்) நம்மாழ்வார் அவதாரம் செய்தத் திருக்குருகூருக்குப் பக்கத்தில் உள்ளத் திருத்தலம். மதுரகவி ஆழ்வார் அவதரித்ததும் இந்தத் திருத்தலமாகும். இங்கு கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள, 'அரவிந்த லோசனனை,' நம்மாழ்வார் அனுபவித்து இன்புற்றது போல, வைணவ ஞானகுருவாகிய இராமானுஜரும் தம் கண்களால் கண்டுக் களிக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு அந்நகருக்குள் புகுந்தார்.

அவர் நகருக்குள் புகும்போது, அங்கிருந்து ஒரு பெண்பிள்ளை, நகரைவிட்டு வெளியேறிக் கொண்டிருந்தாள். இராமானுஜருக்கு ஆச்சரியமாக இருந்தது 'புகும் ஊர் திருக்கோளூராக இருக்க, உனக்கு வெளியேறும் ஊராக இது ஆகிவிட்டதே ஏன்?' என்று ஆச்சாரியார் பெண்பிள்ளையைக் கேட்டார். அந்தப் பெண்பிள்ளை அளித்த பதில்தான் 'திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ரகசியம்' ஆகும். இதில் 81 ரகசியங்கள் அடங்கியுள்ளன. அவ்வளவும் ஆழ்ந்த பொருள் நிறைந்தனவாகும். வைணவப் பக்தர்கள் 81 பேருடைய அருஞ்செயல்கள் இங்குப் பேசப் படுகின்றன. இந்தத் திருக்கோளூர்ப் பதிகமும், பக்தர்களது அருஞ்செயல்கள் கூறும் இந்த இரகசியமும், வைணவர்களுக்குச் சிறந்ததோர் செல்வமாகும்.

## திருக்கோளூர்ப் பதிகம்

### என்மகள் திருக்கோளூர்தான் சென்றிருப்பாள்.

1 உண்ணும் சோறு பருகும்நீர்
திண்ணும் வெற்றிலையும் எல்லாம்
கண்ணன், எம்பெருமான் என்றுஎன்றே
கண்கள் நீர்மல்கி
மண்ணினுள் அவன்சீர் வளம்மிக்க
அவன்ஊர் வினவி,
திண்ணம் என்இளமான் புகும்ஊர்
திருக்கோ ளூரே.

### தலைவி திருக்கோளூர்க்குப் போயிருப்பாளோ!

2 ஊரும் நாடும் உலகமும்
தன்னைப்போல், அவனுடைய
பேரும் தார்களுமே பிதற்றக்
கற்புவான் இடறி,
சேரும்நல் வளம்சேர் பழனத்
திருக்கோ ளூர்க்கே
போருங்கொல் உரையீர் கொடியேன்
கொடி பூவைகளே!

### திருக்கோளூரில் என்மகள் என்ன செய்வாள்?

3 பூவை பைங்கிளிகள் பந்து
தூதைபூம் புட்டில்கள்,
யாவையும் திருமால் திருநாமங்-
-களேகூவி எழும்,என்
பாவை போய்இனித் தண்பழனத்
திருக்கோ ளூர்க்கே,
கோவைவாய் துடிப்ப மழைக்கண்ணொடு
என்செய் யும்கொலோ!

### திருக்கோளூர்க்கா என்மகள் செல்ல விரும்பினாள் ?

4 கொல்லை என்பர்கொ லோகுணம்
மிக்கனள் என்பர்கொலோ,
சில்லை வாய்ப்பெண்டு கள்அயற்
சேரியுள் ளாரும்எல்லே,
செல்வம் மல்கி அவன்கிடந்த
திருக்கோ ளூர்க்கே,
மெல்லிடை நுடங்க இளமான்
செல்ல மேவினளே.

### திருக்கோளூரை என்மகள் எப்படி ரசிக்கின்றாளோ

5 மேவி நைந்து நைந்துவிளை—
யாடல்உறாள்; என்சிறுத்
தேவி போய், இனித்தன்
திருமால் திருக்கோ ளூரில்,
பூவியல் பொழிலும், தடமும்
அவன்கோ யிலும்கண்டு,
ஆவிஉள் குளிர எங்ஙனே
உகக்கும்கொல் இன்றே?

### என்மகள் திருக்கோளூரானைக் கண்டு நைவாள்

6 இன்றுஎனக்கு உதவாது அகன்ற
இளமான் இனிப்போய்
தென்திசைத் திலதம் அனைய
திருக்கோ ளூர்க்கே
சென்று, தன்திருமால் திருக்கண்ணும்
செவ்வாயும் கண்டு,
நின்று நின்று நையும்
நெடுங்கண்கள் பனிமல்கவே.

## திருக்கோளூர்க்கு என்மகள் எப்படி நடந்திருப்பாள்

7 மல்குநீர் கண்ணொடு மையல்
உற்ற மனத்தனளாய்
அல்லும்நன் பகலும் நெடுமால்
என்றுஅழைத்து, இனிப்போய்
செல்வம் மல்கி அவன்கிடந்த
திருக்கோ ளூர்க்கே,
ஒல்கி, ஒல்கி நடந்துஎங்ஙனே
புகுங்கொல் ஒசிந்தே!

## என்மகள் கண்ணீர் துளும்பச் செல்வாளோ ?

8 ஒசிந்த நுண்ணிடை மேல்கையை
வைத்து நொந்து நொந்து,
கசிந்த நெஞ்சின ளாய்கண்ண
நீர்துளும்பச் செல்லும்கொல்?
ஒசிந்த ஒண்மலராள் கொழுநன்
திருக்கோ ளூர்க்கே
கசிந்த நெஞ்சின ளாய்எம்மை
நீத்தஎம் காரிகையே !

## என்மகள் எம்மை நினையாமல் சென்றுவிட்டாளே?

9 காரியம் நல்லனகள்அவை காணில்என்
கண்ணனுக்கு என்று
ஈரியாய் இருப்பாள்; இதெல்லாம்
கிடக்க; இனிப்போய்,
சேரிபல் பழிதூய் இரைப்பத்
திருக்கோ ளூர்க்கே
நேரிழை நடந்தாள் எம்மை
ஒன்றும் நினைத்திலளே.

*பழி வருதலை நினையாமல் என் மகள் போய் விட்டாளே ?*

10 நினைக்கிலேன் தெய்வங்காள்! நெடுங்கண்
இளமான் இனிப்போய்,
அனைத்து லகும் உடைய
அரவிந்த லோசனனை,
தினைத்தனை யும்விடாள் அவன்சேர்
திருக்கோ ளூர்க்கே,
மனைக்கு வான்பழியும் நினையாள்
செல்ல வைத்தனளே !

*இவற்றைப் படித்தோர் பொன்னுலகையாள்வர்*

11 வைத்த மாநிதி யாம்மது
சூதனை யேஅலற்றி,
கொத்தலர் பொழில் சூழ்குரு
கூர்ச்சட கோபன்சொன்ன,
பத்து நூற்றுள் இப்பத்து
அவன்சேர் திருக்கோளூர்க்கே
சித்தம் வைத்து உரைப்பார்
திகழ்பொன் னுலகாள்வாரே !

இத்தகைய திருக்கோளூரை விட்டு வெளியேறும் பெண்பிள்ளை, எம்பெருமானார் - இராமானுஜருக்கு அளித்த பதில், பக்தர்களது சிந்தனைக்குரியதொன்றாகும். 'சுவாமி! முயல் புழுக்கை வரப்பில் இருந்தால் என்ன? வயலில் இருந்தால் என்ன? ஞானம் அற்ற நான் எங்கிருந்தால் என்ன?' எனக்கூறி பின்வரும் எண்பத்தொரு வாக்கியங்களை விண்ணப்பம் செய்தாள்.

1 அழைத்து வருகிறேனென்றேனோ அக்குரூரைப் போலே
2 அகமொழித்து விட்டேனோ விதுரரைப் போலே
3 தேகத்தை விட்டேனோ ரிஷிபத்தினியைப் போலே
4 தசமுகனைச் செற்றேனோ பிராட்டியைப் போலே
5 பிணமெழுப்பி விட்டேனோ தொண்டைமானைப் போலே
6 பிணவிருந்திட்டேனோ கண்டாகர்ணனைப் போலே
7 தாய்க்கோலஞ் செய்தேனோ அநுசூயையைப் போலே
8 தந்தைஎங்கே யென்றேனோ துருவனைப் போலே
9 மூன்றெழுத்து சொன்னேனோ க்ஷத்திரபந்துவைப் போலே
10 முதலடியைப் பெற்றேனோ அகலிகையைப் போலே
11 பிஞ்சாய்ப் பழுத்தேனோ ஆண்டாளைப் போலே
12 எம்பெருமான் என்றேனோ பட்டர்பிரானைப் போலே
13 ஆராய்ந்து விட்டேனோ திருமழிசையார் போலே
14 அவன் சிறியனென்றேனோ ஆழ்வாரைப் போலே
15 ஏதேனும் என்றேனோ குலசேகரர் போலே
16 யான் சத்யமென்றேனோ கிருஷ்ணனைப் போலே
17 அடையாளம் சொன்னேனோ கபந்தனைப் போலே
18 அந்தரங்கம் சொன்னேனோ திரிஜடையைப் போலே
19 அவன் தெய்வமென்றேனோ மண்டோதரியைப் போலே
20 அஹம்வேத்மி என்றேனோ விசுவாமித்திரனைப் போலே
21 தேவு மற்றறிவேனோ மதுரகவியார் போலே
22 தெய்வத்தைப் பெற்றேனோ தேவகியாரைப் போலே
23 ஆழிமறை யென்றேனோ வாசுதேவரைப் போலே
24 ஆயனை வளர்த்தேனோ யசோதையாரைப் போலே
25 அநுயாத்திரை செய்தேனோ அணிலங்களைப் போலே

26 அவல்பொரியை ஈந்தேனோ குசேலரைப் போலே
27 ஆயுதங்கள் ஈந்தேனோ அகஸ்தியரைப் போலே
28 அந்தரங்கம் புக்கேனோ சஞ்சயனைப் போலே
29 கர்மத்தால் பெற்றேனோ ஜனகரைப் போலே
30 கடித்து அவனைக் கண்டேனோ திருமங்கையார் போலே
31 குடைமுதலானது ஆனேனோ அனந்தாழ்வான் போலே
32 கொண்டு திரிந்தேனோ திருவடியைப் போலே
33 இளைப்புவிடாய் தீர்த்தேனோ நம்பாடுவான் போலே
34 இடைகழியே கண்டேனோ முதலாழ்வார்களைப் போலே
35 இருமன்னர் பெற்றேனோ வால்மீகரைப் போலே
36 இருமாலை ஈந்தேனோ தொண்டரடிப்பொடியார் போலே
37 அவனுரைக்கப் பெற்றேனோ திருக்கச்சியார் போலே
38 அவன்மேனி ஆனேனோ திருப்பாணரைப் போலே
39 அனுப்பி வையுமென்றேனோ வசிஷ்டரைப் போலே
40 அடி வாங்கினேனோ கொங்குபிராட்டியைப் போலே
41 மண்பூவையிட்டேனோ குருவநம்பியைப் போலே
42 மூலமென்றழைத்தேனோ கஜராஜனைப் போலே
43 பூசக் கொடுத்தேனோ கூனியைப் போலே
44 பூவைக் கொடுத்தேனோ மாலாகாரரைப் போலே
45 வைத்த இடத்திருந்தேனோ பரதனைப் போலே
46 வழியடிமை செய்தேனோ லக்ஷ்மணனைப் போலே
47 அக்கரைக்கே விட்டேனோ குகப்பெருமானைப் போலே
48 அரக்கனுடன் பொருதேனோ பெரியவுடையாரைப் போலே
49 இக்கரைக்கே சென்றேனோ விபீஷணரைப் போலே
50 இனியதொன்று வைத்தேனோ சபரியைப் போலே

51 இங்கும் உண்டென்றேனோ பிரஹ்லாதனைப் போலே
52 இங்கில்லை என்றேனோ ததிபாண்டனைப் போலே
53 காட்டுக்குப் போனேனோ பெருமானைப் போலே
54 கண்டுவந்தேன் என்றேனோ திருவடியைப் போலே
55 இருகையும் விட்டேனோ திரௌபதியைப் போலே
56 இங்குபால் பொங்குமென்றேனோ வடுகநம்பியைப் போலே
57 இருமிடறு பிடித்தேனோ செல்வப்பிள்ளையைப் போலே
58 நில்லென்று பெற்றேனோ இளையாற்றுக்குடி நம்பியைப் போலே
59 நெடுந்தூரம் போனேனோ நாதமுனியைப் போலே
60 அவன்போனான் என்றேனோ மாருதியாண்டான் போலே
61 அவன்வேண்டா என்றேனோ ஆழ்வானைப் போலே
62 அத்வைதம் வென்றேனோ எம்பெருமானாரைப் போலே
63 அருளாழம் கண்டேனோ நல்லானைப் போலே
64 அனந்தபுரம் புக்கேனோ ஆளவந்தாரைப் போலே
65 ஆரியனைப் பிரிந்தேனோ தெய்வவாரியாண்டானைப் போலே
66 அந்தாதி சொன்னேனோ அமுதனாரைப் போலே
67 அநுகூலம் சொன்னேனோ மாலியவானைப் போலே
68 கள்வனிவனென்றேனோ லோககுருவைப் போலே
69 கடலோசை என்றேனோ பெரியநம்பியாரைப் போலே
70 சுற்றிக் கிடந்தேனோ திருமாலையாண்டான் போலே
71 சூளுறவு கொண்டேனோ திருக்கோட்டியூரார் போலே
72 உயிராய பெற்றேனோ ஊமையைப் போலே

73 உடம்பை வெறுத்தேனோ திருநறையூராரைப் போலே
74 என்னைப்போல் என்றேனோ உபரிசரனைப் போலே
75 யான் சிறியேனென்றேனோ திருமலைநம்பியைப் போலே
76 நீரில் குதித்தேனோ கணபுரத்தானைப் போலே
77 நீருகம் கொண்டேனோ காசிசிங்கனைப் போலே
78 வாக்கினால் வென்றேனோ பட்டரைப் போலே
79 வாயிற்கை விட்டேனோ எம்பாரைப் போலே
80 தோள்காட்டி வந்தேனோ பட்டரைப் போலே
81 துறைவேறு செய்தேனோ பகவரைப் போலே

எம்பெருமான் திருவடிக்கீழ் ஈடில்லா பக்திகொண்ட அடியவர்கள் பெருமை பாடும் இவ்வாக்கியங்களின் விரிவை இனிக் காண்போம்.

## 1 அழைத்து வருகிறேன் என்றேனோ அக்ரூரரைப் போலே!

இதில் அக்குரூரர் வைபவம் பேசப்படுகிறது. அக்குரூர் யதுகுலத்தைச் சேர்ந்தவர். இவருடைய தாய் காந்தினி கம்ஸனின் சகோதரியின் கணவர்.

கம்ஸன், கண்ணபிரானைக் கொல்லும் கருத்துடன் வில்விழவு ஒன்றுக்கு ஏற்பாடு செய்தான். அதற்குக் கண்ணனையும் பலராமனையும் அழைத்து வருமாறு தன் மந்திரியும் உறவினனுமான அக்ரூரரை ஏவினான்.

கம்ஸனுடைய வஞ்சக எண்ணத்தை அறிந்த அக்ரூரர் வில் விழாவுக்கு வரும்படி தாம் எப்படிக் கூறியழைப்பது என முதலில் தயங்கினார்.

பின்னர் கண்ணபிரான் பரம்பொருளான ஸ்ரீமந்நாராயணனே எனத்துணிந்து அவனை இந்தக்காரணத்தினாலாவது தரிசிக்கலாம் என மகிழ்ந்து "உம்மாணைப்படியே அழைத்து வருகிறேன்" என்று கூறினார்.

"சேணுலகில் வாழும் உயர்தேவர் உளமாலும்
மாணெழில் உடைக் கமலை மன்னவனை இன்னே
காணலுறுமே நமது கட்புலமும் என்னா
யாணர்நறு முல்லைநிலம் எய்தினான் விழைந்தே"

— செவ்வைசூடுவார் பாகவதம்

"எந்தக் காரணத்தினாலாவது இறைவனைத் தரிசிக்க வாய்ப்பு ஏற்பட்டு அதனை ஏற்றுக்கொண்டேனோ?" என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை "அக்ரூரரைப்போல அழைத்து வருகிறேனென்றேனோ" என்கிறாள்.

## 2. அகமொழிந்து விட்டேனோ விதுரரைப் போலே!

பாண்டவர்களுக்காக வேண்டி, பரந்தாமன் அஸ்தினாபுரிக்குத் தூது சென்ற நாளில் பீஷ்மர், துரோணர், அசுவத்தாமா, விதுரர் போன்றோர் அவனை எதிர்கொண்டு அழைக்கச் சென்றனர்.

தாம் சிறந்த அறிஞரானதனால் தமது இல்லத்திற்கே கண்ணபிரான் எழுந்தருளுவார் என பீஷ்மர் எண்ணினார். குலத்தாலும் கல்வி நலத்தாலும் தானே உயர்ந்தவரானதால் தனது வீட்டிற்கே கண்ணபிரான் வருவார் என துரோணர் நினைத்தார். விதுரர் அற்ப இயல்பினனான நான் கண்ணனை எப்படி அழைப்பது என எண்ணி உருகினார்.

உள்ளுவார் உள்ளிற்றெல்லாம் உடனிருந்து அறியும் கண்ணபிரானுக்குத் தெரியாதா அவரவர்கள் நினைப்பு.

கண்ணன் வழியிலுள்ள இல்லங்களையெல்லாம் ஒவ்வொன்றாகச் சுட்டிக்காட்டி இது யாருடைய இல்லம் என வினவி வந்தான். விதுரருடைய இல்லம் வந்ததும் இது யாருடைய மாளிகை என்று கேட்க அருகில் நின்ற விதுரர் "இது தங்கள் திருமாளிகை" என்றார். "ஆ, எனக்கு இங்கும் ஒரு இல்லமா" என்று சொல்லிக் கொண்டே விதுரர் திருமாளிகையினுள் கண்ணன் எழுந்தருளினான்.

யான் எனது என்னும் செருக்கறுத்தல் மெய்யடியார் இயல்புகளுள் ஒன்று. "நீர் நமது என்றிவை வேர்முதல் மாய்த்து இறை சேர்மின்" என்பது நம்மாழ்வார் அருள் வாக்கு. அதுபோல விதுரரும் யான் எனது என்னும் அகப்பற்று புறப்பற்று இரண்டையும் விட்டவர். தாமும் தமது

உடைமையும் தாமோதரனுக்கே உரியது என எண்ணிய தால் தமது மாளிகையை விதுரர் கண்ணனுடையது என் றார். இவ்வாறு நான் நினைத்தேனோ என்று திருக் கோளூப் பெண்பிள்ளை ''விதுரரைப்போலே அக மொழிந்துவிட்டேனோ'' என்கிறாள்.

## 3. தேகத்தை விட்டேனோ ரிஷிபத்தினியைப் போலே!

கண்ணன் கானகத்தில், ஆயர்குலத்தவருடன் ஆனிரை மேய்த்துக்கொண்டிருக்கையில் ஒருசமயம் கோ பாலர்கள் கண்ணனிடம் ''எங்களுக்குப் பசிக்கிறது. பசி தீர்க்கும் வழி கூறவேண்டும்'' என்றார்கள்.

அதற்கு கண்ணன் ''அந்தணர்கள் அருகில் உள்ள இடத்தில் ஆங்கீரஸம் எனும் யாகம் செய்கிறார்கள். அவர்களிடம் சென்று என் பெயரைக் கூறி உணவு வாங்கி வாருங்கள்'' என்கிறார். அவர்களும் அப்படியே போய்க் கேட்க, அந்தணர்கள் ஒன்றும் செய்யாமல் வாளா இருந் தனர். கோபியர்கள் கண்ணனிடம் மீண்டும் வந்து இதைச் சொல்ல கண்ணனும் ''அந்தணர்களது மனைவியர்களிடம் போய்க் கேளுங்கள். அவர்கள் தவறாது அன்னம் அளிப் பார்கள்'' என்றான். கோபாலர்கள் அப்படியே அங்கு சென்று கேட்க அந்தணப் பெண்கள் அறுசுவை உணவு தயாரித்துத் தாங்களே கொண்டுவந்து பரிமாறினர். கண்ணனையும் கண்டு வழிபட்டனர்.

பின்னர் கண்ணன் அவர்களைத் தங்கள் தங்கள் வீடு செல்லப் பணித்தான். தங்கள் கணவன்மார்கள் கோபிப் பார்களோ என அஞ்சிப் போவதற்குத் தயங்கினார்கள், கண்ணன் அவர்களின் பயத்தைப் போக்கி அருள்செய்து போகுமாறு விட்டான். அவர்களும் அப்படியே செல்ல, அவர்களுள் ஒருத்திமட்டும் கண்ணனை விட்டு பிரிய மன மில்லாமல் கண்ணனை நினைந்தே உயிரை விட்டாள்.

''அப்படி உயிரைக் கருதாது இறைவனையே மனத்திற் கொள்ளும் விருப்பம் உடையேனோ'' என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ''ரிஷீபத்தினியைப் போலே தேகத்தை விட்டேனோ'' என்கிறாள்.

## 4. தசமுகனைச் செற்றேனோ பிராட்டியைப் போலே!

இராவணன் முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய பெருந்தவமும் உடையவன். அவன் சீதையென்பதோர் தெய்வம் கொணர்ந்து வம்புலாம் கடிகாவில் சிறையாய் வைத்த குற்றம் புரிந்தான். அக்குற்றத்தால் அரக்கன் வாழ்வு அழிந்தொழிந்தது.

இராவணனது சீற்றத்தைச் சிறிதும் கருதாமல் அசோக வனத்தில் தன் கணவனை நினைந்து அறம் நோற்றாள் சீதாப்பிராட்டி.

''இதுபோல அடியேனுக்குச் சக்தியுண்டோ'' என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ''பிராட்டியைப்போலே தசமுகனைச் செற்றேனோ'' என்கிறார்.

## 5, பிணமெழுப்பி விட்டேனோ தொண்டைமானைப் போலே!

கிருஷ்ணசர்மா எனும் அந்தணர் ஒருவர் தன் தந்தையின் அஸ்திகளைக் கங்கையில் சேர்க்கவேண்டுமென்று விரும்பி காசி செல்லப் புறப்பட்டார், தன் மனைவியையும் மூன்றுமாத கைக்குழந்தையையும் உடன்கொண்டு பயணம் மேற்கொண்டார். தன் மனைவியால் நெடிய பயணம் மேற்கொள்ள இயலாமை அறிந்த கிருஷ்ணசர்மா நாடாளும் மன்னனான தொண்டைமானிடம் இவர்கள் இருவரையும் அடைக்கலப் பொருளாக ஒப்படைத்து மன

நிம்மதியுடன் காசி சென்றார். கருணை வடிவான தொண்டைமானும், தாய்க்கும் சேய்க்கும் பாதுகாப்பான இடத்தில் வசதி செய்து கொடுத்தான். பல நெருக்கடியான அரசியல் விவகாரங்களில் ஆர்வம்கொண்ட காரணத்தால் சிறிது காலத்திற்குட்பின் அவர்களைத் தொண்டைமான் மறந்தேவிட்டான்.

கிருஷ்ணசர்மா தன் தந்தையின் அஸ்திகளைக் கங்கையில் சேர்த்துவிட்டு கங்கா தீர்த்தததுடன் தொண்டைமானைக்காண வந்தான். அரசனுக்குத் தீர்த்தப்பிரசாதம் கொடுத்த பின்லா தன் மனைவியையும் குழந்தையையும் காண விரும்பினான். அப்போதுதான் நினைவு வந்த தொண்டையான் புசலிடத்தில் சென்று தாயையும் சேயையும் பார்க்க, அவர்கள் இருவரும் மாண்டு கிடப்பதைக் கண்டு மனம் வருந்தினான். செய்வதறியாது திகைத்தான். உடனே கிருஷ்ணசர்மாவிடம் வந்து உன் மனைவியும் குழந்தையும் அரண்மனைப் பெண்களுடன் திருமலை ஸ்ரீநிவாசனைத் தரிசிக்கப்போய் உள்ளார்கள் .இரு தினங்களில் வந்துவிடுவார்கள் என்று கூசாமல் பொய்யைச் சொல்லி அச்சமயம் தப்பித்துக்கொண்டான்.

பின்னர் ஏழுமலைவாசனை நினைந்து உருகி கண்ணீர் விட்டுக் கதறி ''சுவாமி கருணைக்கடலே அடியேனை இவ்வாபத்தினின்றும் மீட்டுவிடு. இல்லையேல் உன் திருவடியில் சேர்த்து விடு'' என்று பன்முறை பிரார்த்தித்தான். வேண்டுவார் இடர் களையும் வெங்கடாஜலபதியும் தொண்டைமான் முறையீட்டிற்கு மனம் இரங்கி நேரில் தோன்றினான். ''அச்சடலங்களைத் திருமலைக்குக் கொண்டுவருமாறு கட்டளையிட்டான். அவ்வாறே அச்சடலங்கள் கொண்டுவரப்பட்டதும் தன்மாயையினால் அவர்களை எழுப்பிக் கொடுத்தான். இதுகண்ட தொண்டைமானும் ஆனந்தம்கொண்டு கிருஷ்ணசர்மாவிடம் அவர்களை ஒப்புவித்தான்.

இப்படி நிகரற்ற பக்தியால் வந்தது இச் செயற்கரிய செயல். இதை திருக்கோளூர்ப் பெண்பிள்ளை தொண்டை மானைப்போல பிணமெழுப்பிவிட்டேனோ'' என்கிறாள்.

## 6. பிணவிருந்திட்டேனோ கண்டாகர்ணனைப் போலே !

கண்டாகர்ணன் என்பான் ஒரு சிவபக்தன். திருமால் மீது துவேஷம் கொண்டு திருமால் திருநாமம் தன் காதில் படாவண்ணம் தன் காதுகளில் மணிகளைக் கட்டிக் கொண்டு அவற்றை அசைத்துக் கொண்டிருந்ததனால் ''கண்டா கர்ணன்'' என்று பெயர் பெற்றான். அவன் சிவபெருமானை நோக்கி பல்லாண்டு தவம் செய்தான். சிவனும் இவனைத் திருத்திப் பணிகொள்ள நினைத்து இவன் முன்னர் தோன்றி முத்திவேண்டின் முகுந்தனைப் பணி என்று கூறினார். உடனே தன் காதில் அணிந்திருந்த மணிகளைக் கழற்றி எறிந்துவிட்டு குபேரனிடம் சென்று நிகழ்ந்தவற்றைக் கூறினான். குபேரன் அவனுக்கு இரங்கி எட்டெழுத்து மந்திரம் உபதேசித்து, திருமால் துவார கையில் கண்ணன் அவதரித்துள்ள செய்தியைக் கூறினான். கண்ணனை வாயினால் பாடி மனதினால் சிந்திக்க போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும் என்று குபேரன் உணர்த்தினான். கண்டாகர்ணனும் கண் ணனைத் தரிசிக்கத் துவாரகை சென்றபோது கண்ணனை எதிரிற்கண்டு தான் கொன்று கொண்டு வந்த பிணத்தை விருந்தாக வைத்துப் புசிப்பாயாக என்று பிரார்த்தித் தான்.

கண்ணபிரானும் அதனை அங்கீகரித்து அவனுக்கு அழியாப் பதத்தை அருளிச் செய்ததோடு அவன் தம்பி யான தந்தகனுக்கும் முத்தி அளித்தருளினான். இதைத் தான் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ''கண்டாகர்ண னைப் போலே பிணவிருந்திட்டேனோ'' என்கிறாள்.

## 7. தாய்க்கோலம் செய்தேனோ அநுசூயையைப் போலே!

அநுசூயை அத்திரி முனிவரின் மனைவி. கற்புக்கடம் பூண்ட பொற்புடைச் செல்வி. இராமபிரான் சீதையுடன் அத்திரி முனிவரின் ஆசிரமத்தை அடைந்த காலத்தில் சீதை அநுசூயையை வணங்கி நின்றாள். சீதையின் திரு மேனி வண்ணம் கண்டு அநுசூயை வியந்து பிராட்டிக்குப் பட்டாடை உடுத்தி மலர்சூட்டி அலங்கரித்து நல்லுரை கூறினாள். தாய்போன்று பரிவுடையளாய் தாய்க்கோலம் கொண்ட அநுசூயைப் பிராட்டியின் திருமேனி எழிலைக் கண்டு வணங்கி மகிழ்ந்தாள்.

''இவ்வாறான மகிழ்ச்சி எனக்கு உண்டோ'' என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ''அநுசூயையைப் போலே தாய்க்கோலம் செய்தேனோ'' என்கிறாள்.

## 8. தந்தை எங்கே என்றேனோ துருவனைப் போலே!

உத்தானபாதன் என்னும் மன்னனுக்கு சுநீதி, சுருசி என்ற இரண்டு மனைவியர். சுநீதிக்கு துருவன் என்பவ னும், சுருசிக்கு உத்தமன் என்பவனும் பிறந்தார்கள். மன்னனுக்கு இளைய மனைவியான சுருசியிடம் மோகம் அதிகம். ஒருநாள் மன்னன் சுருசியின் அந்தப்புரத்தில் மடிமீது உத்தமனை வைத்து கொஞ்சிக்கொண்டிருக்கும் போது துருவன் அங்கு சென்றான். தந்தையின் மடிமீது உட்கார துருவன் முயன்றபோது மாற்றாந்தாயாகிய சுருசி ''என் வயிற்றில் பிறந்தவனுக்கே மன்னன் மடித்தலம் சொந்தம், அதற்கு உரிமை உனக்கில்லை எனக்கடுமொழி கூறினாள்; சுருசிமேல் கொண்ட மையலால் மன்னனும் வாளாவிருந்தான். அறிவாளியான துருவன் இதுகண்டு தன் தாயான சுநீதியிடம் நடந்ததைக் கூறி அழுதான்.

சுநீதியும் "மகனே உலகத்துக்கெல்லாம் தந்தையாகிய பரம்பொருளை நினைத்துத் தவமிருந்தால் உன் விருப்பம் நிறைவேறும்" என்றாள். துருவனும் "அந்தத் தந்தை எங்கே இருக்கிறான்" என்று வினவினான். "கானகம் சென்று தவம் செய்தால் அந்தத் தந்தையை அடையலாம்" என்றாள் சுநீதி.

துருவனும் அவள் அனுமதி பெற்று கானகம் சென்று சப்த ரிஷிகளிடம் மகாமந்திரம் உபதேசம் பெற்று தவம் செய்தான். திருமால் நேரில் தோன்றி மேலான பதவியை அளித்தார். அவன் இன்றும் துருவ நட்சத்திரமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறான்.

உயிர்க்கெல்லாம் தந்தையாகிய இறைவனை நாடுவதே நாம் பெறும் ஞானமாகும். சிறுவன் துருவன் இறைவனை நாடியதுபோலே நாட நான் ஞானம் பெற்றேனோ என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை "துருவனைப்போல தந்தை எங்கே என்றேனோ" என்கிறாள்.

## 9. முன்றெழுத்து சொன்னேனோ க்ஷத்ரபந்துவைப் போலே!

க்ஷத்ரபந்து என்னும் கொடியவன் நாட்டிலுள்ள ஆடவர், பெண்டிர், குழந்தைகள் அனைவரையும் வதைப் பதையேபொழுதுபோக்காகக் கொண்டிருந்தான் இவனது தொல்லை பொறுக்காத மன்னன் க்ஷத்ரபந்துவை நாடு கடத்தி காட்டிடை விட்டான். காட்டகத்தும் இவன் கொடிய வாழ்வு வாழ்ந்து வந்தான். ஒருநாள் காட்டிடை இவன் கண்ணில் முன்னைத் தவத்தின் காரணத்தால் ஒரு முனிவர் தென்பட்டார். வயதான அம்முனிவரைக் கண்டதும் க்ஷத்ரபந்து மனமிளகி அவருக்குத் தொண்டு செய்ய முற்பட்டான். முனிவர் அவனை விசாரித்தறிந்தார். கொடிய வாழ்வினின்றும் அவனை

மீட்டெடுக்கத் துணிந்தார். அவனிடம் "அப்பா நீ செய்யும் பாவச் செயலை இன்றுமுதல் நிறுத்து. நான் உனக்கு மந்திரோபதேசம் செய்கிறேன்" என்றார்.

க்ஷத்ரபந்து "சுவாமி நான் தீத்தொழில் செய்தே பழக்கப்பட்டவன்; உயிர் வர்க்கங்களை வெட்டிக் கொலை செய்வதே என் வாடிக்கை. பழக்கப்பட்ட நெறியிலிருந்து என்னைமாற்ற என்னாலும் முடியாது தங்களாலும் முடியாது" என்றான்.

முனிவர் அவன்மேல் இரக்கம்கொண்டு "நீ கெட்டவனாயினும் என்னளவில் நல்லவனாக உள்ளாய். நான் உனக்கு மந்திர உபதேசம் செய்கிறேன். அதை இடைவிடாமல் சொல்லிக்கொண்டு வா" என்று கோவிந்தா எனும் மூன்று எழுத்து திருநாமத்தை அவன் காதில் உபதேசித்தார்.

க்ஷத்ரபந்துவும் இடைவிடாமல் அம் மந்திரத்தை ஜபித்து வந்தான். அதன் பலனாக பல்லாண்டுகள் அவன் செய்த பாவச் செயல்கள் எல்லாம் தீயினில் தூசாக மாறியது. அவன் தூயவனானான்.

திருமாலை பிரபந்தத்தில் தொண்டரடிப் பொடியாழ்வார் க்ஷத்ரபந்து வைபவம் பேசுகிறார்.

"மொய்த்த வல்வினையுள் நின்றுமூன்றெ முத்துடைய
பேரால் சத்திரபந்து மன்றே பராங்கதி கண்டுகொண்டான்
இத்தனை அடியரானார்க்கு இரங்குநம் அரங்கனாய
பித்தனைப்பெற்றும் அந்தோ பிறவியுள் பிணங்குமாறே"

"க்ஷத்ரபந்து சொன்ன மூன்றெழுத்து என் வாயில் படவில்லையே" என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை "க்ஷத்ரபந்துவைப்போலே மூன்றெழுத்து சொன்னேனோ" என்கிறாள்.

## 10. முதலடியைப் பெற்றேனோ அகலிகையைப் போலே!

கௌதம முனிவரின் மனைவி அகலிகை. இந்திரனின் தீய செயலால் முனிவரால் சபிக்கப்பட்டு கல்லாய்க் கிடந்தாள். ஸ்ரீராமபிரான் விசுவாமித்திரரின் வேள்வி முடித்து மிதிலைக்குச் செல்கையில் ஸ்ரீ ராமன் பாத தூளிபட கல்உருவம் நீங்கி பெண்ணுருப்பெற்று ஸ்ரீ ராமனைப் பணிந்தாள். உலகளந்த பெருமானின் திருவடி சம்பந்தம் பெற்றேனோ'' என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ''அகலியைப் போலே முதலடியைப் பெற்றேனோ'' என்கிறாள்.

## 11. பிஞ்சாய்ப் பழுத்தேனோ ஆண்டாளைப் போலே!

ஆண்டாள் பெரியாழ்வார் திருமகள், திருத்துழாய் பிறக்கும்போதே மணம் பரப்புவது போலே ஆண்டாள் நாச்சியாரும் இளமை முதலே எம்பெருமான் பக்கல் இணையில்லா பக்தி கொண்டாள். மானிடவர்க்கென்று பேச்சுப்படின் வாழகில்லேன் என்ற உறுதியுடன் அரங்கனுக்கு ஆட்பட்டாள். பிற ஆழ்வார்களைவிட பிஞ்சாய்ப் பழுத்தாள் ஆண்டாள், இப்படி இளமையிலேயே ஆண்டாளைப் போலே பிஞ்சாய்ப் பழுத்தேனோ என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 12. எம்பெருமான் என்றேனோ பட்டர்பிரானைப் போலே!

திருவில்லிப்புத்தூர் பட்டர்பிரான் மதுரை நகரின் திருமாலே தெய்வமென நாட்டி கிழியறுத்தார். எம்பெருமானே பெரியாழ்வார்முன் தோன்றி பாராட்டினார். எம்பெருமானின் திருமேனி கண்டதும் பொங்கும்

பரிவாலே பல்லாண்டு பாடியருளினார். அதனால் பெரியாழ்வார் எனும் திருநாமமும் பெற்றார். இவர் தமது பாசுரத்தில் "எந்நாள் எம்பெருமான் உன் தனக்கடியோமென்று எழுத்துப்பட்ட அந்நாளே அடியோங்கள் அடிக்குடில் வீடுபெற்று உய்ந்தது" என்கிறார். பல பாசுரங்களில் திருமாலை "எம்பெருமான்" என்கிறார்.

"இப்படி பரம்பொருளைப் பாராட்டினேனோ" என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை "பட்டர்பிரானைப் போல எம்பெருமான் என்றேனோ" என்கிறாள்.

## 13. ஆராய்ந்து விட்டேனோ திருமழிசையார்போலே!

திருமழிசைப்பிரான் கடவுள் ஆராய்ச்சியில் இறங்கி பௌத்தம், சமணம், லோகாயதம், மாயாவாதம் எனும் சமயங்களில் தனித்தனியாகப் படிந்து ஆராய்ந்து ஒழுகி அவற்றின் குறைபாடுகளைக் கண்டு சைவ சமய நெறியில் நின்றார். சிவவாக்கியர் எனும் பெயரில் பல நூற்களைச் செய்தார்.

பின்னர் ஒருக்கால் பேயாழ்வாரைச் சந்தித்து வாதிட்டு நாரணன் நெறியே நன்நெறி எனக்கொண்டு பேயாழ்வாருக்குச் சீடராகி வைணவராய் வாழ்ந்தார்.

நன்றுதீது கண்டுதீது விட்டேனோ என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை "திருமழிசையார் போலே ஆராய்ந்து விட்டேனோ" என்கிறாள்.

## 14. அவன் சிறியன் என்றேனோ ஆழ்வாரைப் போலே!

நம்மாழ்வார் இறைவனைப்பற்றி "எம்பெருமானே பூமியும் ஆகாசமும் உன்னுள்ளே இருக்கின்றன. ஆகவே

நீ பெரியவனாகிறாய்! நீ என் செவியின் வழியே என்னுள் புகுந்தாய். பெரியவனாகிய உன்னை நான் என் மனத்துளே வைத்தேன் அதனால் நான் பெரியவனா நீ பெரியவனா என்பதை ஆராய்வாய் என்கிறார்.

'' புவியும் இருவிசும்பும் நின்னகத்த நீயென்
செவியின் வழிபுகுந்து என்னுள்ளாய் அவிவின்றி
யான்பெரியன் நீ பெரியை என்பதனை யாரறிவார்
ஊன்பருகு நேமியாய் உள்ளு''

இறைவனை மனத்துள்ளே அடக்கிக் களித்து மகிழ்வதால் ''நான் பெரியவன் அவன் சிறியவன்'' என்றேனோ என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ''ஆழ்வாரைப் போலே அவன் சிரியனென்றேனோ'' என்கிறாள்.

## 15. ஏதேனும் என்றேனோ குலசேகரர் போலே!

மாமன்னராய் இருந்த குலசேகராழ்வார் திருமலையில் தனித்த ஈடுபாடு கொண்டவர். திருமலைப்பிரானைக் கண்டு களித்து ஆனந்தக் கூத்தாடி திருமலையில்.

''கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே''
''மீனாய்ப் பிறக்கும் விதியுடையனாவேனே''
''செண்பகமாய் நிற்கும் தவமுடைய னாவேனே''
''தம்பகமாய் நிற்கும் தவமுடைய னாவேனே''
''கானாறாய் பாயும் கருத்துடைய னாவேனே''
''நெறியாய்க் கிடக்கும் நிலையுடையே னாவேனே''
''படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனோ''
''எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனு மாவேனோ''

என்று எல்லாம் அருளிச்செய்தார்.

திருவேங்கடமென்னும் திருமலையோடு தொடர்புடைய உயர்திணை அஃறிணைப் பொருட்களில் ஏதேனும் ஒன்று பெறுவேனாகவேனும் என்கிறார்.

''திருமலையில் ஏதேனும் ஆகப்பெறுவேன் என்ற எண்ணங் கொண்டேனோ'' என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ''குலசேகரர் போலே ஏதேனும் என்றேனோ'' என்கிறாள்

## 16. யான் சத்யமென்றேனோ கிருஷ்ணனைப்போலே!

மாபாரதத்து வரலாறு இது - அசுவத்தாமா பாரத யுத்தம் முடிவில் பாண்டவர் குலத்தையே வேரறுக்க எண்ணி உப பாண்டவர்களைக் கொன்றான். அபிமன்யுவின் மனைவியாகிய உத்தரையின் கர்ப்பத்தைச் சிதைக்க அபாண்ட அஸ்திரம் ஏவினான். அந்த அஸ்திரத்தினால் அச்சிசு கருகிக் கரிக்கட்டையாய்ப் பிறந்தது. எல்லோரும் வருந்தினர். அதனை வாழ்விக்கக் கருதிய கண்ணபிரான் ''நித்திய பிரம்மச்சாரியாய் இருப்பவன் இக் கரிக்கட்டையைத் தொட்டால் அக் கரிக்கட்டை உயிர்பெற்று எழும்'' என்று கூறினார் ஒருவரும் ''நான் நித்திய பிரம்மச்சாரி'' என்று கூற முன்வரவில்லை.

ஆனால் கண்ணபிரான் பதினாறாயிரம் தேவிமார்களைப் பெற்றிருந்தும் ''யானே நித்திய பிரம்மச்சாரி'' என்று அக்கரிக்கட்டையைத் தொட்டார் அது உயிர்பெற்றெழுந்தது.

பெரியாழ்வார் இத்திருவிளையாடலைத் தம் திருமொழியில் ''உத்தரை தன் சிறுவனையும் உய்யக் கொண்ட உயிராளன்'' என்று அருளிச் செய்கிறார்.

திருவரங்கமாலையில் பிள்ளைப்பெருமாள் ஐயங்காரும் இச்செய்தியினை

'நெட்டரவின் பெருமூச்சுஎழ வீசுநெருப்பில் வெந்து
பட்டகடம்பும் தழைத்ததுமீளப் பசுந்துளவின்
மட்டுஅவிழ் தொங்கல்அரங்கர் பொற்றாள்பட வாளிவெந்தீ
சுட்டகருங்கட்டையும்பெற்றது ஆர்உயிர்சொல்வதுஎன்னே'

என்று வியக்கிறார்.

''நானே சத்யம் என்று துணிந்து கூற வாய்ப்புண்டோ'' என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ''யான் சத்ய மென்றேனோ கிருஷ்ணனைப் போலே'' என்கிறாள்.

## 17 அடையாளஞ் சொன்னேனோ கபந்தனைப் போலே!

கபந்தன் கோர உருவம் கொண்ட ஒரு அரக்கன். அவனுக்குத் தலையுமில்லை, கால்களுமில்லை. பெரிய வயிறும், மிக நீண்ட இரு கைகளுமே அவன் உருவம் வயிற்றுக்குள்ளேயே அவனுக்கு ஒரு பெரிய வாய் உண்டு மார்பிலே ஒரு கண் உண்டு. காட்டில் ஒரு இடத்தில் அசையாமல் இருந்துகொண்டு இரண்டு கைகளையும் நீட்டி அவற்றுள் அகப்படும் ஜந்துக்களை வயிற்றுக்குள் போட்டுக்கொண்டு தின்றுவிடுவான். பார்க்கச் சகிக்காத கோர உருவம் கொண்ட கபந்தனிடம் கானகத்தில் சீதாப் பிராட்டியைத் தேடிக்கொண்டு போகையில் இராம லக்ஷ்மணர்கள் அகப்பட்டுக் கொண்டார்கள். அரக்கனிடம் அகப்பட்ட இருவரும் சிறிது நேரம் திகைத்தனர். பிறகு இராம லக்ஷ்மணர்கள் அரக்கனின் இரு கரங்களையும் வெட்டித் தள்ளினர்.

கபந்தன் கரங்கள் வெட்டப்பட்டதும் அவனுக்கு தன் முற்பிறவி நினைவு வந்தது. இராம லக்ஷ்மணர்களைப் பார்த்து அவன் சொன்னான் ''என்னுடைய தீச்செயலினால் இந்திரனால் சாபம் பெற்று இக்கோர உருவத்தோடு வாழ்ந்து வருகிறேன். என் கரங்களை வெட்டிய உங்களை

இராம லக்குவர்கள் என அறிந்து கொண்டேன். உங்களால் நான் சாப விமோசனம் பெற்றேன்'' இவ்வாறு கூறிய அவன் கோர வடிவம் நீங்கி சுய வடிவுடன் வெளிப்பட்டான். இராம இலக்குவரிடம் "சீதையைத் தேடிவரும் நீங்கள் விரைவில் சீதையை அடைவீர்கள். ரிஷியமுகபர்வதத்தில் வசித்துவரும் வானர மன்னனாகிய சுக்ரீவனைத் தொடர்பு கொண்டால் உங்கள் காரியம் கை கூடும்'' என்று சொல்லி விமானம் ஏறி விண்ணுலகு சென்றாள்.

''துயரமுற்றவர் மனத்தை ஆற்றி துயர் நீங்கும் வகையையும் எடுத்துரைத்தேனோ'' என்று சொல்லி கபந்தனைப்போலே அடையாளம் சொன்னேனோ'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 18. அந்தரங்கம் சொன்னேனோ திரிஜடையைப் போலே

திரிஜடை அரக்கர் குலப் பெண். விபீஷணனின் மகள்; அறமும் இரக்கமும் அற்ற இராவணன் குலத்தில் தோன்றிய புனிதவதி.

அசோகவனத்தில் இராவணனால் அல்லல்பட்ட சீதைக்கு உயிர்த் தோழியாய்த் திகழ்ந்தாள் திரிஜடை. இராவணனும் மற்ற அரக்கியரும் கணவனைப் பிரிந்த சீதையை அல்லல் படுத்தியபோது நல்லுரைகளால் சீதையை அமைதிபடுத்தினாள் திரிஜடை.

பல்வேறு நிலைகளில் சீதையின் கற்பினைச் சோதிக்க இராவணன் வந்தபோதெல்லாம், ''விரும்பா மாதரைத் தீண்டின் இராவணன் தலை வெடிக்கும்'' என்ற அந்தரங்கம கூறி சீதையின் மனதுயரை மாற்றினாள்.

மாயா சனகன் சீதையை மிரட்டியபோதும் உண்மை நிலையைச் சீதையிடம் கூறி அமைதிப் படுத்தினாள்.

"அன்ன சாபம் உள்தென ஆண்மையான்
மின்னு மௌலியன் மெய்ம்மையன் வீடணன்
கன்னியன் வயின் வைத்த கருணையால்
சொன்ன துண்டு துணுக்கம் அகற்றுவாள்"

என்று சீதை திரிஜடையைப் புகழ்கிறாள்.

மற்றவர்களின் துயரம் நீங்க நல்ல மனம் பெற்று உண்மைச் செய்திகளைச் சொன்னேனோ என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை "திரிஜடையைப் போல அந்த ரங்கம் சொன்னேனோ" என்கிறாள்.

## 19. அவன் தெய்வம் என்றேனோ மண்டோதரியைப் போல!

மண்டோதரி இராவணன் மனைவி தலைசிறந்த கற்புடையவள். இராவணனின் தீய செயலை மனைவி என்ற நிலையில் மறைத்து "ஏந்துபுயத்து இராவணனார் காதல்" என்றும்" என்னேயோ என்னேயோ இராவணனார் முடிந்த பரிசு" என்றும் பாசம் தோன்ற கூறியவள்.

தன் கணவனின் புண்ணுற்ற உடலைக்கண்டு புலம்பிய நிலையில் மெய்ஞ்ஞானம் பெற்று உயிர் துறந்த உத்தமி.

"என்றழைத்தனள், ஓங்கிஎழுந்து அவன்
பொன்தழைத்த பொருவரும் மார்பினைத்
தன்தழைக் கைகளால் தழுவித்தனி
நின்றழைத்து உயிர்த்தாள் உயிர்நீங்கினாள்"

என்பார் கம்பர்.

உயிர் நீங்கும் நிலையில் கணவர் உயிர்கொண்ட கரிய மேனிப்பிரானை பரம்பொருளே என மெய்ம்மை உணர்ந்து உயிர் துறந்தாள்.

"ஆரா அமுதாய் அலைகடலிற் கண்வளரும்
நாராயணன் என்றிருப்பேன் இராமனைநான்"

இப்படி நல்லறிவு பெற்றேனோ இறைவனை உள்ள வாறறிய என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை "மண் டோதரியைப் போலே அவன் தெய்வம் என்றேனோ" என்கிறாள்.

## 20. அகம்வேத்மி என்றேனோ விசுவாமித்திரனைப் போலே!

இராவண வதம் செய்வதற்காக அயோத்தியில் அவ தரித்த இராமபிரானை அயோத்தி நின்றும் வெளிப் படுத்த வருகிறார் விசுவாமித்திரர். சித்தவனத்தில் தான் செய்யும் யாகத்தைத் தடைசெய்யும் அரக்கர்களை விலக்க தசரத குமாரர்கள் நால்வரினும் கரிய செம்மலான ராம னைக் கேட்கிறார். இராமனின் இளமைப் பருவம் எண் ணிய தசரதர் இராமனை அனுப்ப மனமில்லாமல் தானே யாகம் காக்க வருவதாகக் கூறுகிறார்.

விசுவாமித்திரர் கோபங்கொண்டு "நீ நினைப்பது போல ராமன் சிறியவன் அல்லன். அறப்பெரியவன், தசரதனே இவன் யாரென்பதை "அஹம்வேத்மி" நானே அறிவேன். இவன் பராக்கிரமசாலியும் மகாதேஜஸ் உடையவன் என்றும் நான் அறிவேன்; வசிஷ்டரும் அறி வார்" என்று கூறினார். வால்மீகி ராமாயணத்தின் "அகம்வேத்மி" சுலோகம் ஸ்ரீபெரியவாச்சான் பிள்ளை யின் தனி சுலோகத்தில் விரிவாகப் பேசப்படுகிறது.

இப்படி "நான் அறிவேன்" அஹம்வேத்மி என்று விசு வாமித்திரனைப் போல என்றேனோ என்கிறாள் திருக் கோளூர்ப் பெண்பிள்ளை.

## 21 தேவு மற்றறிவேனோ மதுரகவியார் போலே!

பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான மதுரகவியாழ்வார் நம்மாழ்வார் திருவடி பற்றியவர். பிற ஆழ்வார்கள் ஸ்ரீ நாராயணனைப் பாட மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரையே பாடியவர். பகவத் பக்தியிலும் பாகவத பக்தியே ஏற்றம் எனக் காட்டிய அருளாளர். ''கண்ணிநுண் சிறுத் தாம்பு'' எனும் திவ்விய பிரபந்தத்தைப் பாடி ''தேவுமற்றறியேன்'' என்றருளி பேரின்ப வீடுபெற்றவர்.

''ஆசாரியனே நமக்குத் தெய்வம். இவனினும் மிக்க தெய்வம் இல்லை'' என்று உறுதிகொண்டேனோ என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ''தேவுமறிவேனோ மதுரகவியார் போலே'' என்கிறாள்.

## 22. தெய்வத்தைப் பெற்றேனோ தேவகியாரைப் போலே!

ஸ்ரீமன் நாராயணன் கண்ணனாக அவதாரம் கொண்டபோது தேவகியார் திருவயிற்றில் அவதரித்தான்.

தன் சகோதரியான தேவகி வயிற்றில் பிறக்கும் குழந்தையால் தனக்கு மரணம் வரும் என அறிந்த கம்ஸன் தேவகியையும் வசுதேவரையும் கொடிய சிறையில் அடைத்து வதைத்தான்.

தேவகியின் திருவயிற்றில் எட்டாவது குழந்தையாக சிறைக்கூடத்தில் எம்பெருமான் அவதரித்தான். ''என்ன நோன்பு நோற்றனளோ இவனைப்பெற்ற வயிறுடையாள்'' என அருளாளர்கள் அதிசயிக்க ஏற்றம்பெற்றவள் தேவகி. அண்டமெல்லாம் தாங்கும் அற்புத வடிவினைப் பத்து மாதம் தாங்கிய இவளே 'ஒருத்தி'' எண்பாள் ஆண்

டாள் நாச்சியார் தவத்தின் பயனாகக் கண்ணனைப் பெற்றாள் தேவகி. இவ்வாறான அரிய பக்தியால் பெரியதொரு விருப்பம் கொண்டிலனே என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை "தேவகியாரைப்போலே தெய்வத்தைப் பெற்றேனோ" என்கிறாள்.

## 23. ஆழிமறை என்றேனோ வசுதேவரைப் போலே!

சிறைக்கூடத்தில், கம்ஸனின் கட்டுக் காவலில் தேவகியின் எட்டாவது குழந்தையாக எம்பெருமான் பிறந்தார். பெருமானின் திருமேனி அழகு கண்ட தேவகியார் இக்குழந்தையையும் கம்ஸன் கொன்றுவிடுவானோ என அஞ்சினாள். சங்கு சக்கரத்துடன் அவதரித்த கண்ணனைக் கண்ட வசுதேவர் "பெருமானே, தீய கம்சன் தனக்கு மரணம் வருமெனக் கருதி உன்னைக்கொல்லக் காத்திருப்பதால் நீ யார் என்று அவன் அறியாவண்ணம் உன்னுடைய திவ்வியாயுதமாகியச் சக்கரத்தை (ஆழியை) மறைத்துக் கொள்வாயாக" என்று வேண்டினார். எம்பெருமானே பிறந்துள்ளார் என்பதை ஆழியும் சங்கும் கண்டு அறிந்தாலும அவன் மீதுள்ள பரிவினாலே இந்தத் திருமேனிக்குத் தீங்கு வரக்கூடாதே என்று வசுதேவர் பயந்தார். கண்ணபிரானும் அவ்வாறே ஆழியை மறைத்து பிறந்தவுடனே தந்தை சொல் பேணினார்.

சர்வ வல்லமையுடைய இறைவனுக்கும் என்ன நேரிடுமோ என்று அச்சமுறுமாறு எனக்குப் பரிவு உண்டோ? 'வசுதேவரைப்போலே ஆழிமறையென்றேனோ" என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை,

## 24. ஆயனை வளர்த்தேனோ யசோதையாரைப் போலே!

கண்ணன் தேவகியார் திருவயிற்றில் பிறந்து ஆயர்ப் பாடியில் நந்தகோபர் திருமாளிகையில் தன் தந்தையான வசுதேவரால் கொண்டு விடப்பட்டான். ''ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய்'' ஒளித்து வளரலானான்.

கண்ணனைக் கொல்ல கம்ஸன் ஏவிய பல அரக்கர் களின் தொல்லைகளினின்றும் மீள யசோதை பல்லாற்றா லும் முயன்றாள். ஏரார்ந்த கன்னி யசோதை கண்ணனின் தீம்புகண்டு உகந்ததோடு அவனைக் காப்பாற்ற பட்டபாடு விரிக்கிற் பெருகும். தாய் நிலையில் அவள் பட்டபாட்டை தன் நிலையில் ஆழ்வார்கள் பிரபந்தத்தில் பலவாறு அருளிச் செய்துள்ளார்கள்.

இறைவனிடம் இப்படிப்பட்ட பரிவு எனக்கில்லையே என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ''யசோதையாரைப் போலே ஆயனை வளர்த்தேனோ'' என்கிறாள்.

## 25. அநுயாத்திரை செய்தேனோ அணிலங்களைப் போலே!

ஸ்ரீ ராமபிரான் சீதையை மீட்க இலங்கைக்குச் செல் லக் கடலில் அணை கட்டினார். சேதுபந்தனம் செய்வதில் வானர வீரர்களான அநுமான், அங்கதன், நளன் போன் றோர் பெரிய மலைகளையும் குன்றுகளையும் கொண்டு வந்து கடலில் போட்டனர். அப்போது அதனைக்கண்ட அணிலானது அவர்கள் செய்யும் கைங்கர்யத்தில் தானும் ஈடுபட நினைந்துத் தன்னாலானதைச் செய்தது. நீரில் குதிப்பது, மணலில் புரள்வது பின் அணை கட்டும் இடத் தில் புரண்டுத் தன் மேலிருக்கும் மணலை உதிர்ப்பது என்று இப்படிச் செய்தது.

அணிலின் கைங்கர்ய உணர்வு கண்ட இராமபிரான் மகிழ்ந்து தன் திருக்கரத்தால் தடவிக்கொடுத்தார். ஒரு அணிலின் கைங்கர்யத்தால் எல்லா அணில்களின் உடம்பி லும் ராமன் கைத்தழும்பு மூன்று கோடுகள் காணக் கிடக் கின்றன.

நாம் எந்த நிலையில் நின்றாலும் இறைத்தொண்டு செய்ய வேண்டும் என்பதனையே அணில்கள் காட்டின.

தொண்டரடிப் பொடியாழ்வார் தம் திருமாலையில்

"குரங்குகள்மலையைத்தூக்கக்குளித்துத்தாம்புரண்டிட்டோடித்
தரங்கநீர் அடைக்கலுற்ற சலமிலா அணிலம் போலேன்"

என்றார்.

அணில்கள் போன்ற பரிவு இறைவன் விஷயத்தில் தனக்கு ஏற்படவில்லையே என்று திருக்கோளூர்ப் பெண் பிள்ளை "அநுயாத்திரை செய்தேனோ அணிலங்களைப் போலே" என்கிறாள்.

## 26. அவல் பொரியை ஈந்தேனோ குசேலரைப் போலே!

கண்ணனும் குசேலரும் இளம்பருவத்தில் சாந்தீபினி முனிவரிடத்தில் கல்வி கற்றவர்கள். கண்ணபிரான் துவா ரகையை அரசாண்டுவந்தான். குசேலரோ சுசீலை என் னும் பெண்மணியை மணந்து இருபத்தேழு குழந்தை களைப் பெற்று வறுமையால் கஷ்டப்பட்டார்.

ஏழைக் குசேலரின் மனைவி தங்கள் வறுமை நோய் களைய குசேலரை துவாரகாபுரி மன்னனைக் கண்டுவர வேண்டினாள். பெரியவர்களைக் காண வெறுங்கையுடன் செல்லலாகாது என்ற நிலையில் கொஞ்சம் அவல் தயா ரித்துக் கொடுத்து அனுப்பினாள்.

இந்தக் காரணத்திலாவது கண்ணனைக் காணலாமே என்ற அவாவினால் குசேலர் நடந்தே துவாரகை சென்றார். கண்ணபிரானைக் கண்டார். கண்ணன் குசேலரைக் கண்டதும் மகிழ்வுற்று எழுந்து வரவேற்று ''நடந்த கால்கள் நொந்தவோ'' என்று குசேலரின் கால்களை வருடினார்.

தான் கொணர்ந்த அவலை எப்படிக் கொடுப்பது என்று வெட்கப்பட்டுக்கொண்டிருந்தக் குசேலரிடமிருந்து தானே அவலை வாங்கி உண்டு அகமகிழ்ந்தான் கண்ணன். ஏழைக் குசேலரின் வெறும் அவலை உண்டு வாழ்நாள் கவலையைப் போக்கினான்.

இறைவன் வழிபாட்டிற்கு எளியவன் இலையோ பூவோ புகையோ நீரோ அன்பினால் அளிப்பதை ஏற்று அருள்பவன். அப்படிப்பட்டவனை வழிபட இவ்வாறு கையில் கிடைப்பதைக் கொண்டு முன்வந்தேனோ என்று ''குசேலரைப் போலே அவல் பொரியை ஈந்தேனோ'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 27. ஆயுதங்கள் ஈந்தேனோ அகஸ்தியரைப் போலே!

அகஸ்தியர் ஆற்றல்சால் முனிவர். ஸ்ரீ இராமபிரானும் லட்சுமணரும் சீதாப்பிராட்டியும் அகஸ்தியரது ஆசிரமத்திற்கு வந்தார்கள். ஸ்ரீ இராமனின் வருகையை முன்கூட்டியே தெரிந்த அகஸ்தியர் சென்று வரவேற்றுத் தனது ஆஸ்சிரமததிலேயே வசிக்குமாறு வேண்டினாா. ஸ்ரீராமன கானக வாழ்வையே விருப்பியபோது, தன்னிடமுள்ள அஸ்திரங்களையும் தெய்வ ஆயுதங்களையும் கொடுத்து வழியனுப்பினார்.

இராவண வதம் எனும் தேவகாரியமாக அவதரித்த எம்பெருமான் திருஉளம் அறிந்து அகஸ்தியர் ஆயுதங்களைப் பெருமானுக்கு அளித்தார்.

இவ்வாறான உதவி அடியேனால் செய்ய இயலாதே என்று ''அகஸ்தியர் போலே ஆயுதங்கள் ஈந்தேனோ'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 28. அந்தரங்கம் புக்கேனோ சஞ்சையனைப் போலே!

சஞ்சயன் திருதராஷ்டிரனுடைய அந்தரங்க நண்பன் வேதமுனி. போர்க்களச் செய்தியை ஞானக்கண்ணால் தெரிந்து கொண்டு தன் நண்பனுக்கு அந்தரங்கமாய்ச் சொல்லி வந்தான். பாண்டவர்க்கும் வேண்டியவன். வணங்காமுடி மன்னனான துரியோதனனும் மரணமுறும் முன் சஞ்சையன் திருவடி வீழ்ந்து வணங்கினான்.

சஞ்சயன் தனது செயல் யாவும் அந்தரங்க சுத்தியானது என்றான். இதுபோல நான் செய்வனவற்றை உள்ளன்போடு செய்கிறேனா என்கிறாள் ''சஞ்சயனைப் போலே அந்தரங்கம் புக்கேனோ'' என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 29. கர்மத்தால் பெற்றேனோ ஜனகரைப் போலே!

மிதிலைப் பேரரசரான ஜனகர் ஞானமே வடிவானவர். கருமமே கண்ணானவர். ஒருக்கால் சில முனிவர்களுடன் மிதிலைக்கு அருகில் ஓரிடத்தில் யாச்ஞவல்க்கரிடம் பிரம்ம வித்தையைப்பற்றி ஆய்வு செய்துகொண்டிருந்தார். யாக்ஞவல்க்யர் கூடியிருந்தோரின் குணநலங்களைக் காணவிரும்பி ஒரு உபாயம் செய்தார். அருகில் உள்ள மிதிலை நகர் தீப்பிடித்து எரிவதாக இரு வீரர்களைக் கூக்குரல் இடச்செய்தார். குரல் கேட்டதும் கூடியிருந்த முனிவர்கள் அனைவரும் மிதிலை தீப்பிடித்தால் தங்களது கமண்டலம், ஆடை முதலியன அழிந்து போகுமே என்று

பதறி ஓடினர். ஆனால் ஜனகர் மாத்திரம் இருந்த இடத்தை விட்டு அகலவில்லை. யாக்ஞவல்க்யர் இதுபற்றி கேட்டபோது ஜனகர் "என்னுடையது என்று எதுவும் கிடையாது எல்லாம் எம்பெருமான் உடமையல்லவா" என்றார்.

தாம் கற்றதைச் செயலால் நடத்திக் காட்டினார். அனுஷ்டான சீலராக இருந்ததாலேயே சீதாப்பிராட்டியை வளர்க்கவும் ஸ்ரீ இராமனுக்கு மாமனாராகவும் பாக்கியம் பெற்றுத் திகழ்ந்தார்.

திருக்கோளூர்ப் பெண்பிள்ளை இதைத்தான் ',ஜனககரைப் போலே கர்மத்தைப் பெற்றேனோ'' என்கிறாள்.

## 30. கடித்து அவனைக் கண்டேனோ திருமங்கையார் போலே!

திருமங்கையாழ்வார் திருக்குறையலூர் கிருத்தலத்தில் கார்த்திகையில் கார்த்திகை நாள் அவதரித்தவர்.

மல்லாண்ட திண்தோள் மார்பினனான இவரை சோழ மன்னன் திருமங்கை நாட்டிற்குச் சிற்றரசனாக நியமித்து பணிகொண்டான். சிற்றரசராக இருந்த இவர் சிற்றின்ப வேட்கையராகவுமிருந்தார்.

அந்நாட்டில் திருவெள்ளக்குளம் திருப்பதியில் வாழ்ந்த குமுதவல்லி என்பவளைத் திருமணம் புரிந்து கொள்ள திருமங்கை மன்னன் விரும்பினான். பல்கால் முயற்சித்து ஒருநாள் குமுதவல்லியிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்தான். அவள் பஞ்ச ஸமஸ்காரம் செய்து கொண்ட ஸ்ரீ வைஷ்ணவனுக்கே நான் ஆட்படுவேன்'' என்று தன் கருத்தைக் கூறினாள்.

அதுகேட்ட மங்கைமன்னன் திருநிறையூர் சென்று எம்பெருமானைப் பிரார்த்தித்து அப்பெருமானிடமிருந்து

பஞ்ச ஸம்ஸ்காரங்களையும் பெற்று பரம வைஷ்ணவ ராய்த் திருவெள்ளக்குளத்திற்கு வந்தார். மீண்டும் குமுத வல்லி "நீர் ஒரு வருஷகாலம் தினமும் 1008 வைணவர் களுக்கு அமுது செய்வித்து ஸ்ரீ பாததீர்த்தம் ஏற்றாலன்றி உம்மைக் கணவராக ஏற்கமாட்டேன்'' என்று கூறினாள். குமுதவல்லிமீது கொண்ட மையலால் திருமங்கை மன்னன் அதற்கு உடன்பட்டு சபதம் செய்து கொடுத்து அவளைத் திருமணம் செய்துகொண்டார்.

ஒப்புக்கொண்ட நியமத்தின்படி தினமும் 1008 வைணவர்களுக்கு அமுது செய்து வந்தார். தம்வசம் உள்ள பொருள்கள் யாவும் தீர்ந்த பின்னர் அரண்மனை செல்வத்தையும் அதற்கே செலவிட்டார். மேலும் அமுத ருத்தப் பணமில்லாமையாலே திருடியாவதுத் திருமாலடி யாரை பேணத்துவங்கினார். அன்பர்களைத் துணைக்க ழைத்துக்கொண்டுக் காட்டு வழிகளில் பதுங்கியிருந்துவழிப் பறி கொள்ளை நடத்தி வரலானார். அதன்மூலம் வரும் செல்வத்தால் திருமாலடியார்களை உபசரித்துவந்தார்.

தன்னடியார் திறத்தகத்து திருமங்கை மன்னன் காட் டும் அன்புகண்டு அவனை ஆட்கொள்ளத் திருவுளம் பற்றி னான் எமபெருமான். மங்கை மன்னன் தன்னை வழிப் பறிக்குமாறு தானும் பிராட்டியுமாய் திருமணத் தம்பதி கள் போல் கோவம பூண்டு விலையுயர்ந்த நகைகள் அணிந்து இவர் பதுங்கியிருக்கும் வழியில் வந்தான். மரத் தடியில் பதுங்கியிருந்த மங்கை மன்னன் திருமணத் தம்பதி களை வழிமறித்து அணிகளை எல்லாம் கழற்றிக்கொண் டான். மணமகன் காலில் அணிந்திருந்தக் கணையாழி மோதிரத்தைக் கழற்ற முடியாமல் பற்களால் கடித்து வாங்கினான். இம் மிடுக்கைக் கண்ட மணக்கோலம் பூண்ட எம்பெருமான் கலியனோ என்றழைத்தார்.

புதுமணத் தம்பதிகளிடமிருந்து வழிப்பறி செய்த பொருட்கலை எல்லாம் மூட்டைக கட்டித தூக்க முயலும்

போது அது மலைபோல நிலையாயிருக்கக் கண்டான் மங்கைமன்னன். பலசாலியான கலியன் வியப்புற்று மண மகனிடம் ''நீ ஏதோ மந்திரம் பண்ணியுள்ளாய் அதனை எனக்குச் சொல்லு'' என வாளைக்காட்டி அச்சுறுத்திக் கேட்டார். ஆட்கொள்ளும் தருணம் எதிர்நோக்கியிருந்த எம்பெருமானும் மந்திரத்தை உனக்குச் சொல்லுகிறேன்'' என்று வேதசாரமானதும் நலம் தரும் சொல்லானதுமான திருஎட்டெழுத்து மந்திரம் உபதேசித்தார். பின்னர் மணக்கோலம் நீக்கித் திருமகளுடன் காட்சி கொடுத்தார் எம்பெருமான்.

எம்பெருமானிடமிருந்தே திருமந்திர உபதேசம் பெற்றதாலும் திருமேனி கண்டதாலும் திருவடியில் உள்ள கணையாழியைக் கழற்றுவதற்காகத் தாமரையன்ன திருவடியில் வாய் வைத்துக் கடித்ததாலும் மங்கைமன்னன் திருமங்கை ஆழ்வாரானார். இப்படி பலவந்தமாக ஏதேனும் செய்து நலம்தரும் சொல்லான நாராயணாவென்பதை நான் கண்டுகொள்ளவில்லையே என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ''திருமங்கையார் போலே கடித்து அவனைக் கண்டேனோ'' என்கிறாள்.

## 31. குடை முதலானது ஆனேனோ அனந்தாழ்வான் போலே!

ஆயிரம் தலையுடைய ஆதிசேஷன் அகலகில்லேன் இறையுமென்று எப்பொழுதும் எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்து கொண்டிருப்பவன்.

எம்பெருமான் நடந்தால் குடையாகவும் இருந்தால் சிங்காசனமாகவும் நின்றால் திருவடிகளுக்குப் பாதுகையாகவும், திருப்பாற்கடலில் பள்ளிகொள்ளும்போது படுக்கையாகவும் ஒளிகொடுக்கும் மணிவிளக்காகவும் பூம்பட்டாகவும் சாய்வதற்கு அணையாகவும் என்றிவ்வாறாக எம்பெருமானுக்கு பயன்படுகிறான் ஆதிசேஷன்.

"சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள் — என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற் கரவு.

இதனையே ''எல்லா வகையிலும் இறைவனுக்குக் கைங் கரியம் செய்ய முறபட்டேனோ'' என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ''அனந்தாழ்வான் போலே குடைமுதலா னது ஆனேனோ'' என்கிறாள்.

## 32. கொண்டு திரிந்தேனோ திருவடியைப் போலே!

ஸ்ரீ ராமபிரான் இராவணனோடு யுத்தம் செய்த வே ளையில் இராவணன் தேரின்மீதிருந்து யுத்தம் செய்தான். இராமபிரான் தரையிலிருந்து யுத்தம் செய்ய நேரிட்டது. இது சரியன்று என்று அனுமான் நினைத்து அவரைத் தம் தோளின்மேல் ஏற்றிக்கொண்டு யுத்த களத்தில் திரிந்தார் அநுமன்.

எப்போதும் பெருமானைத் தாங்கிச் செல்வதனால் கருடாழ்வார் பெரியதிருவடி எனப்படுவார். இராமாவ தாரத்தில் தாங்கியதனால் அனுமனைச் சிறிய திருவடி என்பது வழக்கம்.

அநுமன்மேல் இராமன் அமர அநுமன் அவரை ஏற் றுத் திரிந்தார். அநுமனைப்போல எம்பெருமானுக்கு உகப்பானது செய்ய அடியேனுக்கு வாய்ப்பு இல்லையே என்ற ஆதங்கத்தில் திருவடியைப் போலே கொண்டு திரிந்தேனோ என்கிறாள்.

## 33. இளைப்புவிடாய்தீர்த்தேனோ நம்பாடுவான் போலே!

திருக்குறுங்குடியில் வாழ்ந்த நம்பாடுவான் தாழ்ந்த குலத்துதித்த ஸ்ரீ வைணவன். தினமும் இரவில் விழித்திருந்து எம்பெருமான் புகழ்பாடி விடியலில் திருக்கோயில் சென்று வெகு தொலைவில் நின்று திருப்பள்ளி எழுச்சி பாடும் இயல்பினன். பல்லாண்டுகள் இந்தத் திருத்தொண்டில் ஈடுபட்டுவந்த நம்பாடுவான் ஒரு கார்த்திகை மாதத்து ஏகாதசியில் எம்பெருமான் திருமுன்பு பாடச் செல்லுகையில் ஒரு பிரமராக்ஷஸ் வழியில் மறித்து அவனைப் புசிக்க முயன்றது. நம்பாடுவான் "நீ என்னைப் புசிப்பதைப் பற்றிக் கவலைப்படவில்லை. இன்று ஏகாதசி. எம்பெருமானைப் பாடித் துதித்து பின்புவந்து உனக்கு உணவாகிறேன்'' என்றார். பிரமராக்ஷஸ் ''நீ வராவிட்டால் என்னாவது? உன் வார்த்தையை எப்படி நம்புவது'' என்றது. அதற்கு நம்பாடுவான் பல்வேறு சத்திய வாக்குகளைப் புகன்றான். இவ்வாக்குகள் கைசிகபுராணத்தில் சிறப்பாக உள்ளன. இவ்வாக்குகளால் மனது ஈர்க்கப்பட்ட பிரம்மராக்ஷஸ் நம்பாடுவானைக் கோயிலுக்குச் செல்ல அனுமதித்தது. அவன் சென்று பண்ணாரப் பாடித் திருப்பள்ளி உணர்த்தி வந்து பிரமராக்ஷஸிடம் தன்னை இஷ்டப்படி உண்ணுமாறு வேண்டினான்.

முற்பிறவியில் சோமசர்மா எனும் அந்தணன் பிழைபட யாகம் செய்ததால் பிரமராக்ஷஸ் வடிவம் பெற்றிருந்தான். சொன்ன சொல் தவறாத பாகவத உத்தமனைக் கண்டதும் அதற்கு ஞானம் உண்டாயிற்று. உடனே அது நம்பாடுவானைப் பார்த்து '' நீ ஒருநாள் பாடிய பாட்டின் பலனைக் கொடு உன்னை விட்டுவிடுகிறேன்'' என்றது. நம்பாடுவான் "நான் பலன் பார்த்துப் பாடவில்லை'' என்றான். அதன்மீது இரக்கம் கொண்ட நம்பாடுவான் அன்றிரவு பாடிய பண்களில் கைசிகம் என்ற

பண்ணின் பலனைக் கொடுத்தான். அப் பலனால் பிரம ராக்ஷஸ் தன் பாபம் நீங்கி பசிப்பிணி பிறவிப்பிணி எனும் இளைப்புவிடாய் தீர்ந்து பேரின்பம் பெற்றது.

இன்னாசெய்தார்க்கும் இனியவே செய்கின்ற இயல்புடைய மெய்யடியரான நப்பாடுவானை நினைந்து திருக்கோளூர்ப் பெண்பிள்ளை நம்பாடுவான் போல ''இளைப்பு விடாய் தீர்த்தேனோ'' என்கிறாள்.

## 34. இடைகழியே கண்டேனோ முதலாழ்வார்களைப் போலே!

முதலாழ்வார்கள், பொய்கையார், பூதத்தார் பேயார் மூவரும் ஒருநாள் திருக்கோவிலூர் திருத்தலத்தில் ஒன்று சேர்ந்தனர்.

இரவில் பொய்கையாழ்வார் ஒரு ஆசிரமத்து இடைக்கழியில் தூங்கிக்கொண்டிருந்தார். அது ஒருவர் படுக்கவும் இருவர் இருக்கவும் மூவர் நிற்கவும் உரிய சிறிய இடம்.

கொஞ்சநேரம் சென்றதும் அவ்விடத்திற்குப் பூதத்தாழ்வார் வந்துசேர்ந்தார். பூதத்தாழ்வாரை வரவேற்றார் பொய்கையார். தாம் எழுந்து அவ்விடத்தில் இருவருமாக உட்கார்ந்திருந்தனர்.

அச்சமயம் மூன்றாமவரான பேயாழ்வார் அவ்விடைக்கழி பக்கம் வந்து சேர்ந்தார். நள்ளிரவில் வந்த அவரை இருவரும் வரவேற்று வந்தனை செய்தனர். அச்சிறிய இடத்தில் மூவரும் நெருங்கி நின்றுகொண்டு தம்மில் பரஸ்பரம் இறைபுகழ் பேசவும் கேட்பதுவுமாக இருந்தனர்.

மூன்று மெய்யடியார்கள் ஒருசேர நின்றுகொண்டிருக்கும் இவ்வேளையைப் பயன்படுத்தி இவர்களை ஆட்

கொள்ள ஸ்ரீமந் நாராயணன் அவ்விரவில் பெரிய திரு மேனியோடு எழுந்தருளி அவர்களிடையே நின்று நெருக்கத்தை உண்டு பண்ணினார்.

மூவர்மட்டும் நெருங்கி நின்றுகொண்டிருக்கும் இடத்தில் நாலாமவர் யார் என ஐயுற்ற பொய்கையாழ்வார் ''வையம் தகளியா வார்கடலே நெய்யாக வெய்யகதிரே விளக்காக''க் கொண்டு விளக்கேற்றினார். பூதத்தாழ்வார் அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக இன்புருகு சிந்தை இடுதிரியா ஞானத் தீபம் ஏற்றினார். இருவரும் ஏற்றிய தீப ஒளியில் பேயாழ்வார் "திருக்கண்டேன் பொன் மேனி கண்டேன்'' என்று எம்பெருமானின் திருமேனி வண்ணம்கண்டார். மூவரும் உலகளந்தஉத்தமனின் திருமேனித் தொடுதல் பெற்றதுமன்றி இடைகழியே சண்டுமகிழ்ந்துத் தம்பேற்றைப் பிரபந்தமாக உலகிற்கு வழங்கினர்.

இருட்டு வேளையிலும் இடைகழியில் எம்பெருமான் அருள்பெற்ற முதலாழ்வார்களைப்போல தான் இல்லையே என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 35. இருமன்னர் பெற்றேனோ வால்மீகரைப் போலே!

ஸ்ரீ இராமபிரான் உலக அபவாதத்தினால் பிராட்டியைக் கொண்டுபோய் வனத்தில் விட்டுவிட்டு வரும்படி இலக்குவருக்குக் கட்டளை இட்டார். அப்போது சீதாப் பிராட்டி நிறைமாத கர்ப்பிணி.

வால்மீகி சீதையைத் தமது ஆசிரமத்தில் இருத்திப் பேணிக் காத்து வந்தார். வால்மீகர் ஆசிரமத்திலேயே ஒரு குழந்தை பிறந்தது.

முனிவர் அருளினால் குழந்தை சிறப்பாக வளர்ந்து வருகையில் ஒருநாள் சீதை குழந்தையை முனிவரது பார்வையில் விட்டுவிட்டுத் தண்ணீர் எடுத்துவர வெளியில்

செல்ல நேரிட்டது. அச்சமயம் முனிவர் தியானத்திலிருப் பதை நினைந்து குழந்தைக்குக் காட்டு மிருகங்களால் தீங்கு வருமோ எனப்பயந்து மீளவந்து குழந்தையை எடுத் துக் கொண்டு நீர்நிலை சென்றார்.

கொஞ்சநேரம் சென்றதும் வால்மீகர் கண்விழித்துப் பார்த்தார். குழந்தையைக் காணாது திகைத்தார் குழந் தையைக் காணாமையால் சீதாப்பிராட்டி வருந்துவாளே என நினைந்து தன் தவ வலிமையால் ஒரு தர்ப்பையைக் கிள்ளிப்போட்டு ஒரு குழந்தையை உண்டாக்கினார். தண் ணீர் எடுத்துவரப்போன பிராட்டியார் குழந்தையுடனே வந்தார்.

வால்மீகர் ஆசிரமத்தில் இப்படி நிகழ்ந்தது. இரு குழந்தைகளின் தோற்றம் லவன் குசன எனப் பேரிட்டு சகல கலைகளையும் வால்மீகர் இக்குழந்தைகளுக்குக் கற் பித்தார். தமது இராமாயணத்தை முதலில் இவர்களுக்கு உபதேசித்து அதன்மூலம் உலகை வாழ்வித்தார்.

இப்படி இராமாயணம் இசைத்து உலகம் உய்விக்கச் சிறந்த பிள்ளைகள் தான் பெறவில்லையே என்று திருக் கோளூர்ப் பெண்பிள்ளை "வால்மீகரைப் போலே இரு மன்னர் பெற்றேனோ" என்கிறாள்.

## 36. இருமாலை ஈந்தேனோ தொண்டரடிப்பொடியார் போலே!

திருமண்டங்குடித் திருத்தலத்தில் அவதரித்த விப்பிர நாராயணர் திருவரங்கத்துச் செல்வனாரிடம் பக்தி கொண்டு திருத்தொண்டு செய்யக் கருதினார்.

முன்பு மாலாகாரர் கொடுத்த பூமாலையினால் கண் ணன் மகிழ்ந்ததையும் மலர்கொய்யச் சென்ற ஸ்ரீ கஜேந் திரனுக்குப் பரமன் அருளியதையும் நினைந்து பெரியாழ்

வார்போலே தாமும் நந்தவனம் அமைத்து புஷ்ப கைங்கர்யம் செய்து வந்தார். பூமாலைகளால் அழகிய மணவாளனை அலங்கரித்துக் கண்டு மகிழ்ந்து வந்தார்.

இப்படிச் செய்துவரும் காலத்தில் இவர் தேவதேவி எனும் பெண்ணின் மாயவலையில் சிக்கி இடர்பட நேரிட்டது. எம்பெருமான் இவரைத் தடுத்தாட்கொண்டு ''போதரே என்று சொல்லி புந்தியுள் புகுந்துநின்று ஆதரம் பெருக வைத்தான்'' தன்னைத் திருத்திப் பணிகொண்ட திருவரங்கத்துப் பெருமானின் கருணையை நினைந்து அவனுக்கே ஆட்படலானார். பூமாலைத் திருத்தொண்டோடுத் தன் அனுபவங்களைத் திருமாலை, திருப்பள்ளி எழுச்சி எனும் பாமாலை மூலமாகவும் பரமனுக்குச் சமர்ப்பித்தார். தொண்டரடிப்பொடியாழ்வார் எனும் திருநாமமும் பெற்றார்.

பூமாலை பாமாலை சமர்ப்பித்தத் தொண்டரடிப் பொடியாழ்வாரை நினைந்து இவ்வாறான தொண்டிலே அடியேனுக்கு வாய்ப்பு இல்லையே என்று ''தொண்டரடிப்பொடியாழ்வார் போலே இருமாலை ஈந்தேனோ'' என்கிறாள்,

## 37. அவனுரைக்கப் பெற்றேனோ திருக்கச்சியார் போலே !

ஸ்ரீபெரும்பூதூரில் வாழ்ந்தவர் கஜேந்திரதாஸன் எனும் வைசியப் பெருமகனார். நாள்தோறும் காஞ்சீபுரம் சென்று பெருமாளை வழிபடும் நியமம் உடையவர் ஆதலால் திருக்கச்சிநம்பி எனவும் அழைக்கப்பெறுவார். வழிபாடு முடிந்ததும் பெருமாளுக்கு ஆலவட்ட கைங்கரியத்தைத் தொடர்ந்து செய்து வருவார். இவருக்குள்ளச் சிறப்பு பெருமாள் இவரிடம் நேரில் பேசுவார். ஸ்ரீஇராமாநுஜருக்கு எழுந்த 6 ஐயங்களுக்குப் பெருமாளிடமிருந்து

விளக்கங்களைத் திருக்கச்சி நம்பி மூலமே இராமாநுஜர் பெற்றார்.

திருக்கச்சி நம்பியின் திருவடியே கதியெனக் கொண்டு வாழ்ந்து வந்தார் ஒரு வைணவர். பல்கால் திருக்கச்சி நம்பிக்குத் தொண்டு செய்து வந்த அவர் திருக்கச்சிநம்பி பெருமானிடம் நேருக்குநேர் பேசும் இயல்புடையவர் என்பதை அறிந்திருந்ததால் ஒருநாள் திருக்கச்சிநம்பியிடம் ''சுவாமி தாங்கள் பெருமாளிடம் பேசுங்கால் அடியேனுக்கு மோட்சம் கிட்டுமோ எனக் கேட்டுச் சொல்லுங்கள்'' என்றார்.

அன்பர்மீது கொண்டப் பற்றுதலால் திருக்கச்சிநம்பியும் பெருமானிடம் பேசும்போது தன் அன்பனுக்கு மோட்சம் கிட்டுமா எனப் பெருமானிடம் விண்ணப்பித்தார்.

பெருமாள் "உன் அன்பன் அடியார்க்குத் தொண்டு புரிபவன் அதனால் கட்டாயம் அவனுக்கு மோட்சம் கிட்டும்'' என்றார்.

பெருமாளிடம் விடைபெற்று வந்த திருக்கச்சியின் திருவடிகளில் வீழ்ந்து கேட்டார் ஸ்ரீ வைணவர். திருக்கச்சி நம்பிகள் சொன்னார் ''நான் கேட்டேன், உனக்கு மோட்சம் உண்டு என்று பெருமாள் திருவாய் மலர்ந்தார். உனக்கு மோட்சம் உண்டா என்று கேட்டேனே தவிர எனக்கு உண்டா என்று கேட்கவில்லையே'' என்று ஆதங்கப்பட்டார்.

அதற்கு ஸ்ரீ வைணவர் சொன்னார். ''சுவாமி இதற்காக நீர் பெருமாளைச் சிரமப்படுத்த வேண்டும்! உமக்கு நிச்சயமாக மோட்சம் கிடையாது. நீர் எந்த பாகவதருக்குக் கைங்கர்யம் செய்கிறீர்? தினமும் பெருமாளிடம் தானே நிற்கிறீர் என்று''

அதன்பின்னரே திருக்கச்சிநம்பி பெரிய நம்பியிடம் தொண்டு பூண்டார்.

திருக்கச்சிநம்பிகள் போலே எம்பெருமானுடன் உரையாடும் வாய்ப்புப் பெறவில்லையே என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ''திருக்கச்சியார் போலே அவனுரைக்கப் பெற்றேனோ என்கிறாள்.

## 38. அவன்மேனி ஆனேனோ திருப்பாணரைப் போலே!

திருப்பாணாழ்வார் உறையூரில் தாழ்ந்த குலமெனக் கருதப்பட்ட பாணர் குலத்தில் அவதரித்தார்.

திருமால் அருளால் அவதரித்தவராதலால் இளமையிலேயே அவாவற்று எம்பெருமான் திருப்புகழை யாழ்மீட்டிப்பாடும் திருத்தொண்டு செய்துவரலானார். தாழ்ந்த சாதியில் பிறந்த நாம் திருவரங்கத்தலைக் காலால் தீண்டலாகாது எனக் கருதி காவிரியின் தென்கரையிலிருந்து தினந்தோறும் பெரிய பெருமாளைப் பாடி மகிழ்வித்து வந்தார்.

ஒருநாள் திருவரங்கத்துப் பெருமாள் லோகசாரங்க முனிவரின் கனவில் தோன்றி ''நம் அன்பரான பாண்பெருமாளை இழிந்த குலத்தவராகக் கருதாமல் நீரே சென்று தோள்களிலே ஏற்றிக்கொண்டு வாரும் என்று கட்டளை இட்டான. அதன்படியே லோகசாரங்க முனிவரும் காவிரித்துறையில் கையில் யாழுடன் பாடிக்கொண்டிருந்தத் திருப்பாணாழ்வார் திருவடி பணிந்துத் ''தங்களை ஸ்ரீரங்கம் எழுந்தருளப் பண்ணுவித்துக் கொண்டுவர வேண்டும்'' என்பது எம்பெருமான் கட்டளை என்றார்.

திருப்பாணர் ''திருவரங்கத்தை எப்படிக் காலால் மிதிப்பது'' என்று தயங்க லோகசாரங்க முனிவர் எம்பெருமான் நியமனத்தைச் சொல்லி அவரைத் தோளின்மேல் எழுந்தருளுவித்துக்கொண்டு நம்பெருமாள் திருமுன்பு இறக்கிவிட்டார். எம்பெருமானும் தன் திருமேனி வண்ணத்தை ஆழ்வாருக்குக் காட்டியருளினார்.

திருமுடி முதல் திருவடிவரை எம்பெருமானைக் குளிரக்கண்டு அநுபவித்துத் திருப்பாணாழ்வார் அமலனாதிப்பிரான் எனும் திவ்வியப் பிரபந்தம் பாடியருளினார்.

**"கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்**
**உண்ட வாயன் என்உள்ளம் கவர்ந்தானை**
**அண்டர் கோனணிய ரங்கன்என் அமுதினைக்**
**கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணவே"**

என்று திருமேனி அழகில் ஈடுபட்டார். நம்பெருமாளும் அனைவரும் காண திருப்பாணாழ்வாரை தம் திருவடிகளில் சேர்த்துக் கொண்டார்.

இதனையே திருக்கோளூர்ப் பெண்பிள்ளை "அவன் மேனி ஆனேனோ திருபோணர்போலே" என்கிறாள்.

## 39. அனுப்பிவைய்யு மென்றேனோ வசிஷ்டரைப் போலே!

ஸ்ரீ இராமபிரான் அயோத்தி அரண்மனையிலிருக்கும்போது விசுவாமித்திர முனிவர் வந்து தசரதனிடம் யாகத்தைக் காப்பதற்காக இராமனை அனுப்பும்படிவேண்டினார். பிள்ளைப் பாசத்தால் தசரதர் மனம் வருந்தத் துவங்கினார். வசிட்டர் வருங்காலம் உணாந்தவராகையால் விசுவாமித்திரருடன் அனுப்பி வைப்பதன் மூலம் ஸ்ரீ ராமபிரானுக்கு அஸ்ததிர வித்தைகளும், திருமணமும் நடந்தேறும் என்பதறிந்து "தயங்காமல் அனுப்பிவையும் விசுவாமித்திரர் பின்னே" என்று கூறினார். தசரதன் அதன்படி அனுப்பிவைக்க இராம லக்குவனர்க்கு அநேக நன்மைகள் நடந்தன.

இராமனுக்கு நன்மைகள் உண்டாகும் என்று விசுவாமித்திரரோடே அனுப்பச் சொன்னார் வசிட்டர். இவ்வாறு இறைவனுடைய நன்மையை நான் நினைத்தேனோ என்று

திருக்கோளூர்ப் பெண்பிள்ளை ''வசிட்டரைப் போலே அனுப்பிவையுமென்றேனோ'' என்கிறாள்.

## 40. அடிவலங்கினேனோ கொங்குப்பிராட்டியைப் போலே!

ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீ ரங்கத்தில் எழுந்தருளியிருந்த காலம். கொங்குநாட்டைச் சேர்ந்த சுமதி என்னும் அம்மையார் திருவரங்கம் வந்துசேர்ந்தார்.

திருவரங்கத்தில் ஒவ்வொரு இல்லத்திலும் ஸ்ரீ இராமாநுஜருக்கு அன்னபிக்ஷை சிறப்பாக நடந்து கொண்டிருந்தது. இதனைக்கண்ட சுமதி ''வீடு வீடாக பிக்ஷை ஏற்று வாழும் சந்நியாசியினால் என்ன கிடைக்குமென்று அரசன் முதலானோரெல்லாம் அவனுக்கு ஆட்படுகின்றனரே'' என்று மனதில் சந்தேகம் கொண்டாள்.

ஒருநாள் இராமாநுஜரிடமே இதனைக் கேட்டுவிட்டாள். இதற்கு இராமாநுஜர் கூறினார் ''அம்மா அரசனாலும் இந்திராதி தேவர்களானாலும் எம்பெருமானின் பொருள் சேர்புகழைப் பேசத்துவங்கினால் அதன் தத்துவத்தை விளக்க முற்பட்டால் முடிவணங்கி அடங்கியே நிற்பர் ஆட்படுவர் மனக்கவலை தீர அதுவே மாமருந்து''

இதவனக் கேட்ட சுமதி ''சுவாமி! அப்படிப்பட்ட அரும் பொருளை அடியேனும் கற்று உய்வுபெற அருள் புரியவேண்டும்'' என்று திருவடிகளில் வீழ்ந்து வணங்கினாள்.

ஸ்ரீ இராமாநுஜர் அவ்வம்மையாரை மடத்திற்கு அழைத்துச் சென்று பஞ்சஸம்ஸ்காரபூர்வமாக மந்திர உபதேசம செய்தார் ''கொங்கர்கோன் குலசேகரன்'' என்றருளிச் செய்த நம்மையாளுடையார்களில் ஒருவருடை

தேசத்தினின்றும் வந்து அவருடைய தொடர்பை நாம் நேரே பெறாதிருக்கினும் அவருடைய தேச சம்பத்தத்தை யாவது பெறச் செய்தமைக்கு மகிழ்ந்து கொங்குப்பிராட்டி என தாஸ்யநாமம் இட்டு அருளினார்.

அம்மையார் கொங்கு நாட்டிற்குச் செல்ல விரும்பி ஸ்ரீ ராமாநுஜர் திருவடிகளில் வீழ்ந்து "சுவாமி அடியேன் விடைபெறுகிறேன். தேவரின் நினைவை என்றும் வணங் கித் துதிக்கும்படி ஏதேனும் ஒரு அடையாளம் தந்தருள வேண்டும்" என்று விண்ணப்பித்தாள்.

ஸ்ரீ இராமாநுஜர் தன்னுடைய திருவடி நிலையை கொடுத்தருளினார் அம்மையார் ஆசாரியன் திருமேனி அழகை வணங்கி அனுபவித்து தம் ஊர் சென்றார்.

ஆசாரியன் திருவடிகளே எல்லாமுமாவன என்ற எண்ணம் பெற்றாள் கொங்குப்பிராட்டி, திருக்கோளூர்ப் பெண்பிள்ளை இதனை எம்பெருமானாரிடம் "கொங்குப் பிராட்டியைப் போலே அடிவாங்கினேனோ" என்றாள்.

## 41. மண்பூவை இட்டேனோ குருவநம்பியைப் போலே!

குருவபுரம் எனும் ஊரில் ஒரு குயவர் தினமும் தன்து மண் வேலையைத் துவக்குமுன் தான் மண்ணினால் செய்து வைத்திருந்த திருவேங்கடமுடையான் திருவடி களில் மண்ணால் செய்த ஒரு பூவை சமர்ப்பித்து வேலை யைத் துவக்குவார்.

பக்தியுடன் வேங்கடவன் திருமுன்பு சமர்ப்பிக்கப் படும் மண்பூவானது திருமலையிலுள்ள திருவேங்கடமுடை யான் திருவடிகளில் மணம் கமழ்ந்துகொண்டிருந்தது. தினமும் புதிது புதிதாக பூ திடீரென தோன்றுவதுகண்ட அர்ச்சகர்கள் இவ்வதிசயத்தைத் தொண்டைமான் சக்கர

வர்த்தியிடம் தெரிவித்தார்கள். மன்னனும் நேரில்வந்து பார்த்து திகைத்து விளங்காமலிருந்தான். ஒருநாள் கன வில் திருவேங்கடமுடையான் தோன்றி ''பக்தன் இடும் மண்பூவே தமக்கு உகந்த பரிமளப் பூவாகிறது'' என்று கூறி தம் பக்தனின் தூய அன்பை வெளிப்படுத்தினான். மன்னனும் மற்றவர்களும் எம்பெருமான் கூறியபடியே வந்து குருவபுரத்தில் குருவநம்பியைக் கண்டு வணங்கி மகிழ்ந்தனர். இப்படிப் பக்தியினால் ஏதேனும் செய்யவில் லையே என்று ''மண் பூவையிட்னேனோ குருவநம்பியைப் போலே'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 42. மூலம் என்றழைத்தேனோ கஜராஜனைப் போலே !

கஜேந்திரன் என்னும் யானை எம்பெருமானை அருச் சிக்கும் பொருட்டு மலர் கொய்வதற்காக தடாகத்தில் இறங்கியது. பக்திப்பெருக்கால் மலர் கொய்துகொண்டி ருக்கும்போது முதலை ஒன்று அதன் காலை கௌவித் துன் புறுத்தியது. முதலையின்பிடியினின்று தன்னை விடுவித்துக் கொள்ள முடியாமலும் மலர்த்தொண்டு தடைபடுவதை எண்ணி வருத்தியும் கஜேந்திரன் ''ஆதிமூலமே'' என்ற கூக்குரல் இட்டு அழைத்தது. குரல் கேட்டதுங் மூலப் பரம பொருளாகிய திருமால் விரைந்து ஓடிவந்து முதலையின் பிடியினின்று விடுவித்து ''யானைக்கு அன்று அருளை ஈந்தார்.''

கஜேந்திரன் தனது மலர்த்தொண்டு தடைப்பட்ட போது ''மூலமே என்று கதறினானே நான் அவ்வாறில் லையே'' என்று திருக்கோளூர்ப் பெண்பிள்ளை வருந்து கிறாள்,

## 43. பூசக்கொடுத்தேனோ கூனியைப் போலே!

கம்சனால் கண்ணனும் பலராமனும் வில் விழாக் காண வடமதுரைக்கு அழைக்கப்பட்டனர்.

வடமதுரை ராஜவீதியில் கண்ணனும் பலராமனும் செல்கையில் மங்கைப்பருவமுள்ள கூனி ஒருத்தி கையில் மணமுள்ள சந்தனக் கலசம் ஏந்திச் செல்வதைக் கண்டனர். கண்ணன் அவளை விசாரித்தறிய அவள் சொன்னாள் "நான் கம்சனுக்குப் பூசும் சந்தனம் தயார் செய்பவள். அரண்மனை வேலைக்காரி"

கண்ணன் "அப்படியானால் எங்களுக்கும் பூசுவதற்கு மணமுள்ள சந்தனம் தருக" என்றார்.

கண்ணனின் திருமேனி அழகில் ஈடுபட்ட கூனி அன்போடு கண்ணனுக்குப் பூசுவதற்குச் சந்தனம்கொடுத்தாள். தனக்கு நேரும் தண்டனையும் மறந்து கண்ணனுக்குப் பூச்சிட்ட அவளின் கூனை கண்ணன் திருவடி தீண்டுதலால் மாற்றிவிட்டான்.

இப்படி, தனக்குவரும் தீங்கை மறந்து தெய்வக் கைங்கர்யம் செய்யவில்லையே என்று பூசக் கொடுத்தேனோ கூனியைப் போலே என்கிறாள்.

## 44. பூவைக்கொடுத்தேனோ மாலாகாரரைப் போலே!

தீயபுத்திக் கம்சனால் வஞ்சகமாக அழைக்கப்பட்டார்கள் கண்ணனும் பலராமனும். மதுராபுரியில் அவர்கள் இராஜவீதி வழியாக நடந்துவருகையில் மாலாகாரர் என்னும் பூமாலை தொடுப்பவரின் வீட்டிற்குச் சென்றார்கள். பூவைப் பூவண்ணனான கண்ணனுக்கு மலர்கள் மீது

விருப்பம் அதிகம் எனத்தெரிந்திருந்த மாலாகாரர் அவர்கள் இருவருக்கும் வேண்டிய மலர் மாலைகளைத் தந்து மகிழ்வித்தான்.

கண்ணபிரானும் அவனுக்கு நல்வரம் பல ஈந்தருளினார். எம்பெருமான் விருப்பமறிந்து கொடுப்பது ஏற்றமுடையது. தான் அப்படிச் செய்யவில்லையே என்று பூவைக் கொடுத்தேனோ மாலாகாரரைப்போலே என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 45. வைத்த இடத்திருந்தேனோ பரதனைப் போலே!

ஸ்ரீ இராமபிரான் சீதையுடனும் லக்குவனுடனும் கானகம் சென்றதும் தசரதர் ஆவி வானகம் சென்றது. கோசல நாட்டிற்குச் சென்றிருந்த பரதன் அயோத்தி வந்து செய்தி அறிந்தான்.

அண்ணனை எப்படியாவது ஆரண்யத்திலிருந்து அழைத்துவருவதாகக் கூறி கானகம் சென்றான் பரதன். ஆனால் இராமனோ அயோத்தி எழுந்தருள மறுத்தார். பரதன் விருப்பத்திற்கு இணங்க தனது பாதுகைகளைக் கொடுத்து அனுப்பினார். "மரவடியைத் தம்பிக்கு வான் பணையம் வைத்து" என்பது பெரியாழ்வார் வாக்கு.

பரதனும் அப் பாதுகைகளைத் தன் முடிமீது தரித்து நந்திக்கிராமத்தில் பாதுகா பட்டாபிஷேகம் செய்தார். தவ வேடத்துடன் அங்கிருந்தே அயோத்தியைப் பேணினார்.

மெய்யடியார்கள் இறைவன் இட்ட வழக்காயிருப்பார்கள். அவன் உகந்த கைங்கர்யத்தைச் செய்து அடிமையாய் வாழ்வார்கள். அந்த பாங்கில் பரதனும் பாரதந்திரியம் காட்டினான். அப்படித் தானாகவில்லை என்று

திருக்கோளூர்ப் பெண்பிள்ளை "வைத்த இடத்திருந் தேனோ பரதனைப்போலே" என்கிறாள்.

## 46. வழியடிமை செய்தேனோ லக்ஷ்மணனைப் போலே!

ஸ்ரீ இராமபிரான் தந்தை சொல் பேணுவதற்காக காட்டிற்குச் சென்ற வேளையில் இலக்குவரும் உடனே பின்தொடர்ந்து சென்று அடியவரின் ஏவல் செய்தார்.

இறைவனுக்கு ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னிவழுவிலா அடிமை செய்வது பாகவதர் இயல்பு. இதற்குச் சான்றாகத் திகழ்கிறார் இளையபெருமான்.

இதனை மனத்தில் எண்ணியே "வழியடிமை செய் தேனோ லக்ஷ்மணனைப் போலே" என்கிறாள் திருக் கோளூர்ப் பெண்பிள்ளை.

## 47. அக்கரைக்கே விட்டேனோ குகப்பெருமானைப் போலே!

ஸ்ரீ இராமபிரான் சீதையுடன் லட்சுமணனுடனும் கங்கைக்கரையை வந்தடைந்தார். இராமபிரானின் வரு கையைத் தெரிந்த சிருங்கிபேரபுரத்தின் தலைவனான குகன் என்பான் பக்திப்பெருக்கால் வரவேற்றான். வேடற் குலத்தில் பிறந்தவனானாலும் இராமபிரானைப் பார்க்க தேனும் மீனும் கொண்டு வந்து உபசரித்தான்.

காட்டிலேயே இருந்து தன்னைப் பணிகொள்ள வேண்டுமென பிரார்த்தித்தான். கங்கைக்கரையில் புல் லால் அறை அமைத்து பெருமாளையும் பிராட்டியையும் தூங்கவைத்து இரவு முழுவதும் தான் தூங்காமலே வில்லை ஊன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும் காவல் காத் தான்.

பெருமாளும் இவனது பக்தியை மெச்சி ''ஏழை ஏத லன் கீழ்மகன் என்னாது பிழைமான் மடநோக்கி உன் தோழி. உம்பி எம்பி'' என்றருள் செய்தார். ''நின்னோ டும் ஐவரானோம்'' என்று அவனையும் தம்பியாக்கினார்.

மறுநாள் கங்கைக்கரையைக் கடப்பதற்காக குகன் தன் தோணியில் ஏற்றிக் கொண்டுபோய் விட்டான்.

குகப் பெருமாளின் சீரிய தொண்டினைத் தெரிந்த திருக்கோளூர்ப் பெண்பிள்ளை அப்படி ஏதேனும் கைங்கர் யம் செய்தேனோ! இல்லையே என்று ''குகப்பெருமாளைப் போலே அக்கரைக்கே விட்டேனோ'' என்கிறாள்.

## 48. அரக்கனுடன் பொருதேனோ பெரியஉடையாரைப் போலே!

கானகத்தில் இராம லக்குவர் வாழ்ந்துவரும் காலத் தில் இராவணன் மாயமானைக் காட்டி சீதையிடமிருந்து இராம லக்குவர்களைப் பிரித்தான். போலித் துறவி வேடம் பூண்டுவந்து சீதையைத் தூக்கிக்கொண்டு விண்வழி செல்கையில் சீதையின் அபயக்குரல் கேட்ட ஜடாயு என் னும் பெரிய உடையார் விரைந்து உயரப்பறந்து இராவ ணன் தேர் செல்ல வொட்டாமல் தடுத்தார். தன்னுடைய சிறகினாலும் நகத்தாலும் அலகினாலும் போர் செய்தார். ஜடாயுவின் திடீர் தாக்குதலுக்கு எதிர் நிற்கமுடியாத இராவணன் சங்கரன் கொடுத்த வாளால் ஜடாயுவை வெட்டினான். ஜடாயு மூர்ச்சையாகி வீழ்ந்தார். பின்னர் சீதையைத் தேடி வந்த இராமபிரானிடம் இராவணன் தூக்கிச் சென்ற செய்தியைக் கூறி உயிர் நீத்தார். தனக் காக போர் செய்து உயிர்நீத்த ஜடாயுவுக்கு இராமபிரானே நீத்தார் கடன் செய்தார்.

இறைவன் பொருட்டாகத் தன்னைச் சிறிதும் கரு தாது கடமை செய்யவில்லையே என்ற ஏக்கத்தால் "பெரியவுடையாரைப் போலே அரக்கனுடன் பொருதேனோ" என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 49. இக்கரைக்கே சென்றேனோ விபீஷணரைப் போலே!

இராம இராவண யுத்தம் நடைபெறுமுன் இலங்கையில் இராவணன் ஆலோசனை சபையைக் கூட்டினான். விபீஷணன் தவிர மற்றவர்கள் எல்லாம் இராவணனின் தீயச் செயலுக்கு உடந்தையாகவே இருந்தனர். விபீஷணன் மட்டுமே இராவணனின் தீயச் செயலைக் கண்டித்தார். கோபம் கொண்ட இராவணன் தம்பியென்றும் பாராமல் தண்டிக்க முற்பட்டான்.

தீயச்செயல் புரிந்துவரும் இராவணனின் தொடர்பே கூடாது என்று துணிந்து கடலுக்கு மறுகரையில் கூடியுள்ள இராமபிரானின் திருக்கூட்டம் நோக்கி "இராமா சரணம் சரணம்" எனக்கூவி சரணாகதி அடைந்தான் விபீஷணன்.

எம்பெருமானோடு கூடியிருக்கும் இயல்பை அருளாளர்கள் இக்கரை என்று குறிப்பிடுவார்கள்.

"அக்கரை என்னு மனத்தக் கடலுள்
அழுந்தி உன்பே ரருளால்
இக்கரை ஏறி இளைத்திருந் தேனை
அஞ்சேல் என்று கைகவியாய்"

என்பது பெரியாழ்வார் திருவாக்கு.

புறப்பற்றுகளை நீக்கி எம்பெருமானைப் பற்றுவது சரணாகதனது செயல். இது செய்யவில்லையே என்று

விபீஷணரைப் போலே இக்கரைக்கே சென்றேனோ'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 50. இனியதென்று வைத்தேனோ சபரியைப் போலே!

எம்பெருமானிடம் பேரன்பு வாய்ந்தவர்கள் தாங்கள் மிக விரும்புவனவற்றை இறைவனுக்கு அர்ப்பணம் செய்வார்கள். இதை நடைமுறைப்படுத்திக் காட்டியவள் வேடர்குலத்துப் பிறந்த தவமுது மகளாகிய சபரி ஆவாள். ரிஷியமுக மலையில் உள்ள மதங்கமா முனிவர் ஆசிரமத்தில் வசித்து வந்தவள் சபரி. தம் ஆசிரமம் வழியாக இராம இலக்குவர்கள் எழுந்தருளும் செய்தியை முன்பே தெரிந்து கொண்டு அவர்களை வரவேற்கத் தயாரானாள். காட்டிலுள்ள நல்ல கனிகளை பொறுக்கி எடுத்துச் சுவைத்துப்பார்த்துச் சிறந்தனவற்றை இராம இலக்குவர்களுக்காகச் சேர்த்து வைத்திருந்தாள். இருவரும் ஆசிரமத்திற்கு எழுந்தருளியபோது அக்கனிகளை அவர்களுக்குச் சமர்ப்பித்தாள்.

குகன் புனிதமாகக் கொண்டுவந்தத் தேனையும் மீனையும் சும்மா தொட்டு ஆசிவழங்கிய இராமபிரான் சபரியின் எச்சில் பழங்களை உவப்புடன் உண்டு மகிழ்ந்தான்.

எம்பெருமானுக்குத் தாம் விரும்புவனவற்றை வழங்கிய சபரியின் பண்பாடு தன்னிடமில்லையே என்று ''சபரியைப் போலே இனியதொன்று வைத்தேனோ'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 51. இங்கும் உண்டென்றேனோ பிரஹ்லாதனைப் போலே!

அரக்கர்கள் பட்டியலில் மிகவும் கொடியவன் இரண்யன். முனிவரும் துறப்பரோ மகவின்மேல் காதல் என்பதற்கு மாறாகக் கொள்கை வெறியினால் தான் பெற்ற

மகவினையே கொல்லத் துணிந்தான். இரண்யன் மகனான பிரஹ்லாதன் கருவிலேயே நாரதரால் எட்டெழுத்து மந்திர உபதேசம் பெற்றவன். பிறந்த போதிருந்தே நாராயணனை வழிபட்டு உய்ந்தவன்.

இரண்யன் நாராயணனை மறக்குமாறு பல்வேறு உபாயங்களைக் கையாண்டு தன்மகனைத் திருத்த முயன்றான். அதுவும் பலிக்காது போகவே தன் மகனிடம் ''நீ சொல்லும் நாரணன் எங்குள்ளான்'' என்று அதட்டினான். பிரஹ்லாதன் ''அவன் எங்கும் உளன்'' என்றான்.

உடன் இரண்யன் தனக்கு எதிரில் உள்ள தூணைக் காட்டி ''இத்தூணில் உள்ளானோ'' என்றான் ''ஆம் இங்கும் உண்டு'' என்றனன் பிரஹ்லாதன். இரண்யன் அத்தூணைக் கையால் புடைப்ப பிரஹ்லாதன் வார்த்தையைக் காப்பாற்ற இறைவன் நரசிம்மமாய் தூணிடைத் தோன்றியருளினான். ''அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்தவன் எம்பெருமான்'' இவ்வுணர்வில் பிரஹ்லாதன் திளைத்தான். இந்த வாய்ப்பு தனக்குக் கிட்டவில்லையே என்று ''இங்கும் உண்டென்றேனோ பிரஹ்லாதனைப் போல'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 52. இங்கில்லை என்றேனோ ததிபாண்டனைப் போலே!

ஆயர் குலத்தில் கண்ணபிரான் தீராத விளையாட்டுப் பிள்ளையாய் திருவிளையாடல் புரிந்தவேலை. எல்லோர் வீட்டிலும் உள்ள வெண்ணெய், தயிர் போன்றவற்றை அவர்கள் அறியாமல் கண்ணன் உண்டு அவர்களுக்கு அறிவுறுத்துவதற்காக தயிர்த்தாழிகளை உடைத்து உருட்டி விடுவான்.

ஒருநாள் கோகுலத்துப்பெண்கள்எல்லாம்தயிர்த்தாழி உடைத்த கண்ணனை விரட்டிப் பிடிக்க முற்பட்டனர். தன்னை அடிப்பதற்காக கோல்கொண்டு வரும் பெண்களிடம் அகப்படாதபடி ததிபாண்டன் என்பவனுடைய மனையில் புகுந்தான் கண்ணன். தன்னை உட்காரவைத்து ஒரு பெரிய பானையால் மறைத்துவைக்கும்படி ததிபாண்டனை வேண்டினான். ததிபாண்டனும் கண்ணன் மேல் பானைகவிழ்த்து ஒளித்துவைத்து அதன்மேல் உட்கார்ந்து கொண்டான்.

தேடிவந்த பெண்கள் ததிபாண்டனிடம் கண்ணன் எங்கே என்றனர். ததிபாண்டனோ ''கண்ணன் இங்கில்லை'' என்றான். பெண்கள் திரும்பிச் சென்றபோது கண்ணன் வெளியேவர முயற்சித்தான். ஆனால் ததிபாண்டனோ ''எம்பெருமானே! நீ எனக்கும் என் தயிர்ப் பானைக்கும் மோட்சம் தருவதாயின் உன்னை வெளியே விடுகிறேன்'' என்று கூறினான். அப்படியே கண்ணன் வாக்குறுதி கொடுத்து ததிபாண்டனுக்கும் தாழிக்கும் மோட்சம் கொடுத்தான்.

எம்பெருமான் மீது கொண்ட பரிவாலும் ஊற்றத்தாலும் பொய்மையும் வாய்மை யிடத்தவாய் இங்கில்லை என்றான் ததிபாண்டன். அதனை நினைந்து கூறுகிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 53. காட்டுக்குப் போனேனோ பெருமானைப் போலே!

பிரமாதி தேவர்களின் இடுக்கண் களைய எம்பெருமான் அயோத்தி நகரில் தசரதகுமாரராக அவதரித்தார்.

தசரதர் தன் திருமகனுக்கு முடிசூட்ட ஏற்பாடு செய்த போது கூனியினால் கலக்கப்பட்ட கைகேயி மன்னனை வரம் வேண்டி இராமனைக் கானகம் செல்லப்

பணித்தாள். மலக்கிய மாமனத்தனான மன்னவனும் மறாதொழிய "குலக் குமரா காடுறையப் போ" என்று விடை கொடுத்தான். ஸ்ரீ ராமபிரானும் தந்தை சொற் பேணிக்காக்க மாலைமுடி நீத்து மலர்ப்பொன்னடி நோவ கானகம் புகுந்தார்.

அரக்கர்களின் கொடுமை அகற்றவும் தந்தை சொல்லைப் பேணிக்காக்கவும் ஸ்ரீ ராமபிரான் காட்டுக்குப் போனார். தன்னைச் சரணடைந்தத் தேவர்களின் துயரம் தீர்க்கக் காட்டிற்குச் சென்ற எம்பிரானைப்போலே அடியேன் ஏதேனும் செய்யவில்லையே என்று "பெருமானைப் போலே காட்டுக்குப் போனேனோ" என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 54. கண்டுவந்தேன் என்றேனோ திருவடியைப் போலே!

சீதையைத் தேடுவதற்காகப் பல இடத்தும் வானர வீரர்கள் அனுப்பப்பட்டனர். தென்திசை சென்ற அனுமனிடம் இராமன் சீதையின் பல அடையாளங்களை உரைத்தான்.

அனுமனும் கடல் கடந்து இலங்கை சென்று அசோக வனத்துச் சீதையைக் கண்டு அடையாளம் உரைத்து மோதிரத்தையும் கொடுத்தான்.

சீதையும் "அனுமன் அடையாளம் ஒக்கும்" என்று அதனை உச்சிமேல் வைத்து உகந்து தனது சூடாமணியை இராமனிடம் சேர்க்குமாறு அனுமனிடம் கொடுத்தாள்.

அனுமன் அதனைப் பெற்றுக்கொண்டு இலங்கையை எரியூட்டிவிட்டு, இராமனிடம் வந்து "கண்டேன் சீதையை" என்றான்.

எம்பெருமானுக்குத் தொண்டு செய்வதில் ஈடுபட்டு அவனும் அவனடியார்களும் உகக்குமாறு அனுமானைப் போலே ஆகவில்லையே என்று திருக்கோளூர்ப் பெண் பிள்ளை கூறுகிறாள்.

## 55. இருகையும் விட்டேனோ திரௌபதியைப் போலே !

பாண்டவர்களின் மனைவியாகிய திரௌபதியைத் துச்சாதனன் கூந்தலைப் பிடித்து இழுத்துவந்து துகில் களைய முற்பட்டான்.

துகில்களையும் இக்கட்டான நிலையில் தனது கண வன்மார்கள் தனக்குத் துணையாவார்கள் எனக் கருதி னாள் திரௌபதி. ஆனால் துரியோதனனின் சபையில் ஐவரும் பொம்மைகளாயினர்.

சபைப் பெரியவர்களாவது தனது அவலநிலை போக்க உதவுவார்கள் எனக் கருதினாள். அவர்களும் நெட்டை மரமாயினர்.

தன் கையாவது தனக்கு உதவட்டும் என்று துகிலைப் பற்றிப் பார்த்தாள், ஆனால் துச்சாதனனின் முரட்டுத் தனத்திற்கு அவள் கையும் துணை நிற்கவில்லை.

எல்லாம் கைவிட்ட பிறகுதான் இருகைகளையும் உயர்த்தி ''கோவிந்தா'' என்று இறைவனை அழைத் தாள். கோவிந்தனும் ஆடைகொடுத்து அவள் மானம் காத்தான்.

நம்மை காத்துக் கொள்வது நம் முயற்சியாலன்று. இறைவனுடைய திருவருளாலேதான் என்ற துணிவு திரௌபதிக்கு ஏற்பட்டது.

அப்படி ''திரௌபதியைப்போலே இருகையும் விட் டேனா'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 56 இங்குப் பால்பொங்குமென்றேனோ வடுகநம்பியைப் போலே!

வடுகநம்பி, ஸ்ரீ ராமாநுஜரின் அணுக்கத் தொண்டர்களில் சீரியர். ஸ்ரீ ராமாநுஜரின் திருவடியே தனக்குக் கதியெனக் கொண்டவர். இவர் ஸ்ரீ ராமாநுஜருடன் பெருமாளை வழிபடச் சென்றாலும் ஸ்ரீ ராமாநுஜர் திருமேனியையே வழிபடுவார்.

ஒருநாள் ஸ்ரீ ராமாநுஜர் திருமாளிகை வழியாக ஸ்ரீ ரங்கநாதன் திருவீதி உலா வந்தார். பெருமாளின் திருமேனி அழகில் ஈடுபட்டு மெய்மறந்திருந்த ஸ்ரீ ராமாநுஜர் தாம் பெற்ற பேற்றை தம்சீடர் வடுகநம்பியும் பெற வேண்டும் என்று கருதினார். அப்போது வடுகநம்பி திருமடப் பள்ளியில் ஸ்ரீ ராமாநுஜருக்காக பால் காய்ச்சிக் கொண்டிருந்தார். எனவே இராமாநுஜர் ''வடுகா பெருமாளைச் சேவிக்க வா'' என்றார். அதற்கு வடுகநம்பி ''சுவாமி உம்முடைய பெருமாளைச் சேவிக்க வந்தால் என்னுடைய பெருமாளுக்குக் காய்ச்சுகின்ற பால் பொங்கிப் போகும். ஆதலால் வர இயலவில்லை'' என்றார்.

ஆசாரியனைத் தவிரத் தேவுமற்றறியாத வடுகநம்பியைப் போலவா அடியேன் என்று ''இங்குப் பால் பொங்குமென்றேனோ வடுகநம்பியைப் போலே'' என்கிறாள் ஸ்ரீராமாநுஜரிடத்திலேயே திருக்கோளூர்ப்பெண்பிள்ளை!

## 57. இருமிடறு பிடித்தேனோ செல்வப் பிள்ளையைப் போலே!

ஸ்ரீ ராமாநுஜர் திருநாராயணபுரம் எழுந்தருளிய போது அங்கு பெருமாள் திருமேனி காணாது வருந்தினார். எம்பெருமான் கனவில் தான் கல்யாணசரசின் தென்பாகமுள்ள செண்பகச் சோலையில் புற்றில் இருப்பதாகக் கூறியருளினார்.

ஸ்ரீ ராமாநுஜரும் திருப்புற்றில் கோயில் கொண்ட பெருமானைக் கண்டு மகிழ்ந்து மன்னன் உதவியுடன் திருவாராதனத்திற்கு ஏற்பாடு செய்தார்.

திருக்கோயிலில் திருவிழா நடத்தவேண்டும் என்று எண்ணியபோது அங்கு உத்ஸவமூர்த்தி இல்லையே என்று வருந்தினார். அன்று இரவு கனவில் எம்பெருமான் தோன்றி ''நம்முடைய உத்ஸவமூர்த்தி தற்போது டில்லியில் நவாபின் அரண்மனையில் இருக்கிறார். அவரை திருநாராயணபுரம் எழுந்தருளுவித்துவாரும்'' என்றருளிச் செய்தார். அதன்படி ஸ்ரீ ராமாநுஜரும் டில்லி நவாபின் அரண்மனைக்குச் சென்றார் மன்னனிடம் ''எங்கள்தெய்வமான ராமப்ரியர் இங்கு எழுந்தருளியுள்ளார். அவரைத் தந்தருளவேண்டும் என்றார். நவாபோ ''உங்கள் பெருமான் இங்கிருப்பாராயின் அழைத்துச் செல்லுங்களேன்'' என்றார். அப்பெருமான் அரண்மனையில் அந்தப்புரத்திலிருப்பதை அறிந்த ராமாநுஜர் அங்கு சென்று கண்டு ''தொடர் சங்கிலிகை'' எனும் பாசுரம்பாடி அழைத்தார். ராமப்ரியரும் எளிமை தோன்ற செம்பொன் சலங்கை கலீர் கலீர் என்று ஒலிக்க அனைவரும் காணும்வண்ணம் நடந்து வந்து ஸ்ரீ ராமாநுஜர் மடித்தலத்திருந்தார். ஸ்ரீ ராமாநுஜரும் புளகாங்கிதம் அடைந்து ''என்னுடைய செல்வப் பிள்ளையோ'' என்று எடுத்தணைத்து முத்தமிட்டு உச்சிமோந்தருளினார். செல்வப்பிள்ளையும் அவருடைய பெருமைமிகுந்த கழுத்தின் இருபுறத்திலும் தமது இரண்டு கைகளால் சுற்றி வளைத்துப் பிடித்து அணைத்தார்.

செல்வப்பிள்ளை ஸ்ரீ ராமாநுஜரிடம் காட்டிய மகன்மை பேரன்பைப்போல தானும் காட்டவில்லையே என்று ''இருமிடறு பிடித்தேனோ செல்லப்பிள்ளையைப் போலே'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 58. நில்லென்று பெற்றேனோ இளையாற்றுக் குடிநம்பியைப் போலே!

இளையாற்றுக்குடிநம்பி திருவிழாதோறும் திருவரங்கம் வந்து ஸ்ரீ ரங்கநாதனை வழிபட்டு மகிழ்வார். தம்மூர் சென்று மீண்டும் திருவிழா வரும்வரையும் கண்ட கோலத்தையே உள்ளக்கிளியில் உரு எழுதி நினைந்து மகிழ்ந்து கொண்டிருப்பார்.

அவருக்கு நூறு வயதுஆன பொழுதில் உடம்பில் வலிமை குன்றியமையால் சுவாமியின் திருமுளைத் திருவிழாவிற்கு வந்து தரிசிக்க இயலவில்லை. எம்பெருமானும் திருவிழாக் கூட்டத்தில் தேடியருளிக் காணாமல் ''நம் இளையாற்றுக் குடியான் வரவில்லை போலும்'' என்று கூறினார்.

ஆறாந்திருநாளில் இளையாற்றுக்குடிநம்பி பெருமாளை வழிபட்டார். தமது அன்பர் காலதாமதமாக வரக்கண்ட எம்பெருமான் நம்பியிடம் ''நாம் உமக்கு என்ன செய்யவேண்டும்'' எனக் கேட்டார்.

நம்பி ''சுவாமி தந்தருளிய உடம்பினால் கைங்கர்யம் பல செய்திருந்தேன் இப்போது போக்குவரத்துக்கு தகுதியில்லாதபடி மிகவும் இளைத்துவிட்டது'' என்றார். அதற்கு எம்பெருமான் ''வாராய் மெய்யே இளைத்தாயாகில் இங்ஙனே இரு'' என்று அவளிச்செய்தார்; எம்பெருமான் திருக்கோயிலுக்கு உள்ளே எழுந்தருளியபோது இளையாற்றுக்குடிநம்பி வைகுந்தவாழ்வு பெற்றார்.

இதனை எண்ணிய திருக்கோளூர்ப் பெண்பிள்ளை நம்பி இறைவன் கருணையைப் பெற்றார். அதுபோல தான் பெறவில்லையே என்று ''இளையாற்றுக்குடி நம்பியைப் போல நில்லென்று பெற்றோனா'' என்கிறாள்.

## 59. நெடுந்தூரம்போனேனோ நாதமுனியைப் போலே!

ஸ்ரீ வைணவ ஆசாரியாரான ஸ்ரீ நாதமுனிகள் யோக நிஷ்டர். ஒருநாள் நாதமுனிகள் யோகநிஷ்டையிலிருக்கும் போது வில்வல்லார்கள் இருவரும் ஒரு பெண்ணும் ஒரு குரங்கும் வந்து சென்றதாக நிஷ்டை கலைந்தவுடன் சீடர்கள் சொல்லக் கேட்டார், உடனே "ஐயோ வந்தவர்கள் ஸ்ரீ ராமபிரானும், சீதாப் பிராட்டியும், ஆஞ்சநேயருமல்லவா! அவர்களைத் தரிசிக்க இயலவில்லையே" என்று வருந்தினார். அவர்கள்போன திசைநோக்கி அவர்களைத்தேடிச் சென்ருர். வழியில் குரங்கின் காலடி காணப்பெற்றது. பின்னும் செல்ல சிறிது தூரத்தில் பூ விழுந்து கிடந்தது. அப்படியே நெடுந்தூரம் சென்றும் அவர்களைக் காணாமையால் அங்கேயே மோகித்து விழுந்து திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

ஸ்ரீ நாதமுனிகள் போல தானும் பரம்பொருளைத் தேடி நெடுந்தூரம் போனேனோ என்கிருள் திருக்கோளூர்ப்பெண்பிள்ளை.

## 60. அவன்போனான் என்றேனோ மாருதியாண்டான் போலே!

ஸ்ரீ ராமாநுஜர் காலத்தில் சோழமண்டலத்தை ஆண்டுவந்த சோழராஜன் சிவனுக்கு மிஞ்சிய தேவதையில்லை என்று ஒரு ஓலையில் எழுதி அதில் வித்துவான்கள் எல்லோரையும் கையெழுத்திடச் சொன்னான். எல்லோரும் அரசன் ஆணைக்கு பயந்து அவ்வாறே கையெழுத்திட்டார்கள்,

ஸ்ரீ ராமாநுஜரையும், கூரத்தாழ்வரையும் இக்கருத்துடன் தனது சபைக்கு அழைத்தான் மன்னன். தனது ஆசாரியரான ஸ்ரீராமாநுஜருக்குத் தீங்கு வரக்கூடாதெனக்

கருதிய கூரத்தாழ்வான் ஸ்ரீ ராமாநுஜர் போல வேடம் பூண்டு அரசசபை சென்றார். பல அல்லல்களும் பட்டார்.

ஸ்ரீ ராமாநுஜர் தீயவனின் தீச்செயலுக்கு அஞ்சி திருநாராயணபுரத்திற்கு எழுந்தருளி அங்கிருந்தே ஸ்ரீ வைணவம் பேணி வந்தார்.

இச்சோழ மன்னன் பல வருஷங்கள் கழித்து இறந்த பின்னர் ஒருநாள் மன்னன் இறந்த விஷயத்தை இராமாநுஜரிடம் விண்ணப்பம் செய்ய மாருதியாண்டான் என்பவன் திருநாராயணபுரம் சென்றான்.

திருநாராயணபுரத்தில் ஸ்ரீ ராமாநுஜர் ஒரு குளக்கரையில் நின்று கொண்டிருக்கும்போது மாருதியாண்டான் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி "அவன் போனான்" என்று விண்ணப்பம் கொடுத்தான். இச்செய்தியைக் கேட்ட ஸ்ரீ ராமாநுஜர் மகிழ்ந்து அவரை வாரி எடுத்து மகிழ்வினால் "கல்யாண்" என்றருளிச் செய்தார்; அன்று முதல் அக்குளம் 'கல்யாணிசரஸ்' எனப் படலாயிற்று.

ஸ்ரீ ரங்கநாதனை என்று வழிபடப் பெறுவோம் என நினைந்து உருகிய ஸ்ரீ ராமாநுஜருக்கு இச்செய்தி இனிதான செய்தியாயிற்று. இதுபோல தான் ஆசாரியனுக்கு இனிய வார்த்தைகள் சொன்னேனோ என்று "அவன் போனான் என்றேனோ மாருதியாண்டான் போலே" என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 61. அவன் வேண்டா என்றேனோ ஆழ்வானைப் போலே!

இராமாநுஜர் மேல் நாட்டிற்குச் சென்றபின் கூரத்தாழ்வான் ஒருநாள் ஸ்ரீரங்கநாதனை வழிபடச் சென்றார்; திருக்கோயிலுக்குள் செல்கையில் சோழ அரசரின் சேவகர்கள் கூரத்தாழ்வானைத் தடுத்து "நீர் இராமாநுஜரின்

சீடராயின் ஆலயத்தினுள் செல்ல அனுமதிக்க மாட்டோம். ஸ்ரீ ராமாநுஜர் உறவைத் துறந்தால் ஸ்ரீ ரங்க நாதனைச் சேவிக்கலாம்" என்றனர். இவ்வார்த்தையைக் கேட்ட கூரத்தாழ்வார் இரு செவிகளையும் பொத்திக் கொண்டு ''என் ஆசாரியன் உறவு உதறிவிட்டுப் பெருமாளைச் சேவிக்கவும் வேணுமா! அப்படிப்பட்ட பெருமாளான அவன் வேண்டா,' என்று கூறிப் போய்விட்டார்.

ஆசாரியன் திருநாமம் மதிக்காத இடத்தில் பெருமாளை வழிபடும் விருப்பமில்லை என்று துறந்தார் கூரத்தாழ்வார். அப்படி அடியேன் ஆச்சாரிய பக்தி உடையவன் அல்லவே என்கிறுள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 62. அத்வைதம் வென்றேனோ எம்பெருமானாரைப் போலே!

யக்ஞமூர்த்தி எனும் அந்தணர் காசி நகரில் சிறந்த வேதவல்லாராகத்திகழ்ந்தார். ஸ்ரீராமாநுஜரின் புகழைக் கேள்விப்பட்ட யக்ஞமூர்த்தி அழுக்காறு கொண்ட மனத்தராய் இராமாநுஜரை வாதில் வெல்ல வேண்டுமெனக் கருதி திருவரங்கம் வந்தார் ஸ்ரீராமாநுஜரை வாதுக்கழைத்தார். வாதில் தோற்றவர் மற்றவருக்கு அடிமையாக வேண்டும் என்னும் நிபந்தனை. வாதம் 18 நாட்கள் நடைபெறலாயிற்று. வித்யாகர்வம் கொண்ட யக்ஞமூர்த்தி தமது சாயார்த்தியத்தினால் ஸ்ரீ ராமநுஜரை வெற்றிகொள்ள முயன்று கொண்டிருந்தார். ஸ்ரீ ராமாநுஜர் மனம் வருந்தி ஸ்ரீரங்கநாதனிடம் மனம்உருகிப் பிரார்த்தித்தார். "ஆழ்வார் தொடங்கி ஸ்ரீ ஆளவந்தார் காலம் வரை சிராகவளர்ந்து வந்து ஸ்ரீ வைணவ தரிசனம் தன் காலத்தில் தோற்கக் கூடாதே'' என விண்ணப்பித்து அமுது அருந்தாமல் இருந்தார். கனவில் எம்பெருமான் தோன்றி மறுநாள் வாதுக்குச் சென்று யக்ஞமூர்த்தியை வென்று வருமாறுப் பணித்தார்.

ஸ்ரீ ராமானுஜரும் மாயாவாதக் கருத்துக்களை வென்று யக்ஞமூர்த்தியை வாதில் வெற்றி கொண்டார். யக்ஞமூர்த்தி தோல்வியை ஒப்புக்கொண்டு ஸ்ரீராமானுஜர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். ஸ்ரீராமானுஜர் ஸ்ரீரங்கநாதனாலே தனக்குக் கிடைக்கப்பெற்ற சீடரான யக்ஞமூர்த்திக்கு "அருளாளப்பெருமாள் எம்பெருமானார்" எனும் தாஸ்ய நாமம் கொடுத்து ஆட்கொண்டார்.

எம்பெருமான்பெருமையை அவன் துணை கொண்டே வென்ற வாய்ப்பு தன்போல்வாருக்கு இல்லையே என்று எம்பெருமானாரிடமே கூறுகிறுள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 63. அருளாழங் கண்டேனோ நல்லானைப் போலே!

ஸ்ரீ வைணவ அந்தணர் ஒருவர் தினமும் நீராட நதிக்குப் போவது வழக்கம். ஒருநாள் கரையில் ஒரு பிரேதத்தை கண்டார். அப்பிரேதம் பஞ்சசம்ஸ்காரம் பெற்றதாயிருந்தது. அதைக்கண்ட அந்தணர் "ஐயோ! இது அநாதைப் பிரேதமாயிருந்தாலும் உடலில் எம்பெருமான் திருவிலச்சினை இருக்கிறதே. இதை நாம் அவமரியாதை செய்யக் கூடாது" என்று கருதினார். எந்தக்குலம் எனத் தெரியாத அப்பிரேதத்தை எடுத்துக்கொண்டு போய் தகனம் செய்தார். இதனை அறிந்த அவ்வூர் அந்தணர்கள் அது தாழ்த்தப்பட்ட குலத்தைச்சார்ந்தவனுடைய பிணம் என்பதைத் தெரிந்து தகனம் செய்த அந்தணரை ஜாதியினின்றும் நீக்கி ஜாதிக்கட்டுப்பாடு செய்தார்கள்.

பஞ்சசம்ஸ்காரம் பெற்றதேகத்தை ஒரு பொருளாகக் கருதி மதித்த அந்தணரின் அருளின் ஆழம்கண்ட எம்பெருமான் ஆவேசமாக "நீர் நாட்டுக்குப் பொல்லான், நமக்கு நல்லான் ஆகையால் இன்றுமுதல் உமக்கு நல்லான் சக்கரவர்த்தி என்று நாமம் சூட்டுகிறேன்" என்றார். அன்று

முதல் அவருக்கும் அவர் பரம்பரைக்கும் நல்லான் சக்கர வர்த்தி என்று பெயர் வழங்கலாயிற்று.

நல்லானைப்போலே அருளாழம் காணப் பெற்றிலனே என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 64. அனந்தபுரம் புக்கேனோ ஆளவந்தாரைப் போலே!

திருவரங்கம் பெரிய கோயிலில் திருவத்யயனத் திருநாள் நடைபெற்றுக் கொண்டிருந்த வேளையில் ஒருநாள் திருவரங்கப் பெருமாள் அரையர்.

"கெடும் இடராய எல்லாம் கேசவா வென்ன நாளும்
கொடுவினை செய்யும் கூற்றின் தமர்களும் குறுககில்லார்
விடமுடை அரவில் பள்ளி விரும்பினான் சுரும்பலற்றும்
தடமுடை வயலனந்த புரநகர்ப் புகுது மின்றே"

என்னும் திருவாய்மொழியை அபிநயத்துப் பாடிக்கொண்டிருந்தார் ஸ்ரீ ஆளந்தார் இதனை பார்த்துக்கொண்டிருந்தார். அபிநயக்காரரோ அந்த பாசுரத்தில் 'நடமினோ நமர்களுள்ளீர்! நாமுமக்கு அறியச் சொன்னோம்' என்னும் பகுதியை பலதடவை ஸ்ரீ ஆளவந்தாரை நோக்கிச் சொன்னார்.

இதனைக்கேட்ட ஆளவந்தார் அப்போதே ஸ்ரீரங்கநாதனையும், அரையரையும் வீழ்ந்து வணங்கி தனது திருமடத்திற்குக் காவலாக தெய்வவாரியாண்டானை நியமித்து வைத்து திருவனந்தபுரம் எழுந்தருளினார். அங்கு சென்று அனந்தபுரத்தம்மானைத் திருவடித் தொழுது திருவரங்கம் வந்தார்.

அப்படித் தன் வாழ்வு அமையவில்லையே என்று ''அனந்தபுரம் புக்கேனோ ஆளவந்தாரைப் போலே'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 65. ஆரியனைப் பிரிந்தேனோ தெய்வவாரியாண்டனைப் போலே !

தெய்வவாரியாண்டான் ஸ்ரீ ஆளவந்தாரின் சீடர், ஸ்ரீஆளவந்தார் திருவனந்தபுரம் எழுந்தருளியபோது இவரைத் தம் திருமடத்துக்குக் காவலாய் விட்டுச் சென்றார். தம் ஆசாரியரின் பிரிவைத் தாங்க இயலாத தெய்வவாரியாண்டான் சில நாளில் உடம்பு இளைத்து நோயுற்றார். வைத்தியர்கள் வந்து கேட்டபோது தனக்கு ஆசாரியன் பிரிவைத் தவிர வேறு நோயில்லை என்றார். அன்பர்கள் அனைவரும் வாரியாண்டானைப் பல்லக்கில் வைத்து எடுத்துக்கொண்டு திருவனந்தபுரம் நோக்கிச் சென்றனர். திருவனந்தபுரத்திலிருந்துமீண்டும்கரைமனை ஆற்றில் எழுந்தருளியிருந்த ஸ்ரீஆளவந்தார் தெய்வவாரி யாண்டானைக் கண்டதும் திடுக்கிட்டார். ஆண்டானும் ஆளவந்தார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். வந்த காரணத்தை மற்றவர்கள் மூலம் அறிந்த ஆளவந்தார் தெய்வவாரியாண்டானைப் பார்த்து அருளினார் "ஸ்ரீராமர் வீரராக இருந்தமையால் ஸ்ரீபரதாழ்வான் அவர் வைத்த இடத்தே இருந்தார். நாம் அப்படியல்லா மையால் நாம் வைத்த இடத்தில் இராமல் இருந்து விட் டீர்'' இதைக்கேட்ட தெய்வவாரியாண்டானும் ''ஸ்வரூப ஹானிபட்டேனே'' என்று வீழ்ந்து கிடந்தார்.

இவர் எழுந்திராமை கண்ட ஆளவந்தார் ''என்னை வீரராக ஆக்கினால்ஒழிய எழுந்திரேன் என்று கிடக்கின் றீரோ'' என, இவரும் 'இதுவும் ஒரு ஸ்வரூபஹானியா யிற்றே' என்று பரபரப்பாய் எழுந்து நின்றார். அப்போது அங்குள்ள மற்ற சீடர்கள் தெய்வவாரியாண்டானின் ஆசாரிய பிரிவாற்றாமை கண்டு இரங்கி மனம் நெகிழ, ஆளவந்தார் ''ஆண்டானே மிகவும் மெலிந்தீர்'' என்று முதுகை தடவிக்கொடுத்து திருவனந்தபுரம் திருக்கோயி லைக் காட்டி "அனந்தபுரத்துப் பெருமானைச் சேவித்து

வாரும்'' என்றார். ஆண்டனோ ''அடியேனுடைய அனந்தபுரம் எதிரே வந்திருக்க அங்கே போவானேன்'' என்றார். தெய்வவாரியாண்டானின் ஆசாரிய பக்திகண்டு உகந்தருளிய ஸ்ரீஆளவந்தார் அவரைக் கூட்டிக்கொண்டு திருவரங்கம் எழுந்தருளினார்.

ஆசாரியனை விட்டுப் பிரிந்ததனால் தெய்வவாரி யாண்டானுக்கு உடம்பு இளைத்தது. இதனைக்கருதியே ''ஆசாரியனைப் பிரிந்தேனோதெய்வவாரியாண்டானைப் போலே'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 66. அந்தாதி சொன்னேனோ அமுதனாரைப் போலே!

திருவரங்கம் பெரிய கோயிலில் சந்நிதி புரோகிதரா கத் திகழ்ந்தவர் அமுதனார். சகல சாஸ்திரங்களையும் கற்றறிந்த இவர் திருவரங்கனுக்கு, குடிகுடி ஆட்செய்யும் இயல்பினர். கூரத்தாழ்வரால் ஞானச்சுடர் கொளுத்தப் பெற்றஅமுதனார் ஸ்ரீராமாநுஜரின் திருவடியைப்பணிந்த போது எம்பெருமானார் கூரத்தாழ்வான் திருவடிகளிலே படுகாடு கிடக்கப் பணிந்தார்.

ஆசாரிய பக்தி தோன்ற பிரபந்தம் செய்யவேண்டு மென்று விரும்பிய அமுதனார் ஸ்ரீராமாநுஜர் திருவடி களில் விண்ணப்பிக்க எம்பெருமானாரும் ''உமக்குப் பிர பந்தம் செய்யவேணுமென்கிற விருப்பம் உண்டாகில் உமக்கு லட்சியமான ஆழ்வானும் நமக்கு லட்சியமான ஆழ்வார்களும் அவர்கள் உகந்தருளின நிலங்களும் விளங்கு மாறு ஒரு பிரபந்தம் செய்யும்'' என்று ஆணையிட்டார்.

அமுதனாரும் அவ்வாணையைச் சிரமேற்கொண்டு எம்பெருமானார் திருவடிகளில் விருப்பமுடையவர் களுக்கு, காயத்ரிபோல தினசரி பாராயணம் செய்யும் பாங்கில் பாடல்தோறும் இராமாநுஜன் என்னும் திரு

நாமம் இட்டு நூற்றெட்டு பாடல்கள் அருளிச் செய்தார். ஸ்ரீஇராமாநுஜர் மற்ற அருளாளர்களுடன் இப்பிரபந்தத்தைத் திருச்செவி ஏற்ற மகிழ்ந்து தன்னுடைய அடியவர்கள் எல்லாம் தினசரி ஓதும்படி நியமித்தார். அமுதனாருக்கு 'திருவரங்கத்தமுதனார்' எனும் திருநாமமும், இப்பிரபந்தத்திற்கு 'பிரபந்த காயத்ரி' என்னும் திருநாமமும் வழங்கலாயின. இந்தப் பாசுரத்தில் ஏழாம் பாசுரத்தில் தம் ஆசாரியரான கூரத்தாழ்வாரைக் குறிப்பிட்டு உள்ளார்.

ஆசாரிய பக்தி தோன்ற அவருடைய குணநலங்களைப்பாடிப் புகழவில்லையே என்று ''அந்தாதி சொன்னேனோ அமுதனாரைப் போலே'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 67. அநுகூலம் சொன்னேனோ மாலியவானைப் போலே!

மாலியவான் இராவணனுக்கு பாட்டன். இராவணன் போர்க்களத்துத் தோற்று வருந்தியிருக்கும் காலையில், மூப்பின்யாக்கை வாங்கிய வரிவில்அன்ன மாலியவான் என்று ஓதும் பூங்கழல் அரக்கன் வந்து இலங்கை வேந்தனுக்கு அறிவுரைப்புகன்றான் ''முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய பெருந்தவமும் உடைய நீ தேவர். யக்ஷர், கந்தர்வர்களால் மரணம் வராதிருக்க வரம் பெற்றனை. மனிதரால் மரணம்வராதிருக்க வரம் பெறவில்லை. மனிதவடிவுடன் அறம் தலைநிறுத்த ஆண்டவனே இராமனாகத் திருமேனி தாங்கியுள்ளான். எனவே மரணமடைவது உறுதி! மரணமடையுமுன் ராமனிடம் சரணமடைய வேண்டும்'' என அறிவுரைப் புகன்றான்,

கொடிய மனமுடையோரை திருத்த மாலியவான் போலதான் ஏதேனும் சொல்லவில்லையே என்று ''அநுகூலம்சொன்னேனோ மாலியவானைப் போலே'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 68. கள்வனிவன் என்றேனோ லோககுருவைப் போலே!

மாவலி சக்கரவர்த்தி எல்லாப் பொருளும் தன்னுடையதென்று உணர்வால் வந்து கேட்டவர்க்கெல்லாம் எல்லாம் வழங்குவதாக விளம்பரம் செய்தான். சத்து, சித்து பொருள்களை நிர்வாகம்செய்யும் ஈஸ்வர தத்துவம் உணராத இவனைத்திருத்திப் பணிகொள்வதற்காக இந்திராதிதேவர்கள் வேண்டுகோளுக்கிணங்க திருமால் வாமனனாக திருமேனி தாங்கினார். மாவலிபால் சென்று மூவடி மண் கேட்டார். வந்தவர்க்கெல்லாம் வழங்கிக்கொண்டிருந்த மாவலி தருகிறேன் என்றார். ஆனால் உடனிருந்த குருவாகியசுக்கிராச்சாரியாரோ வந்தவனை இனம் கண்டுகொண்டார். அண்டர்நாயகனே கையேந்தி நிற்பதைக் கண்டு சுக்கிராச்சாரியார் இது மாயம் எனக்கருதி "தானம் செய்யக் கூடாது. வந்திருப்பவன் மாயன், கள்வன்" என்றார். குருவின் வார்த்தையை மீறி தானம் செய்ய முற்பட்ட மாவலியைத்தடுக்கவும் செய்தார். தானம் தடுத்தசெயலால் எம்பெருமான் சுக்கிரன் கண்ணைப் பறித்தார்.

மிக்க பெரும் புகழ் மாவலி வேள்வியில்
தக்கது இது அன்று தக்கது இதுஅன்று தானம்விலக்கிய
சுக்கிரன் கண்ணைத் துரும்பாற் கிளறிய
சக்கரக் கையனே"

என்பது பெரியாழ்வார் வாக்கு.

இறைவன் அடியார் உள்ளம்கவர் கள்வன். வேதமும் அவனைத் திருடன் என்றே புகழும் திருமேனி அழகாலும் குணங்களாலும் அடியார் உள்ளம் கவரும் இறைவனைக் கள்ளன் என்ற சொல்லாலே குறிப்பிட்டவர் சுக்கிராச்சாரியார். அந்தவாய்ப்பு தனக்குக் கிட்டவில்லையே என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 69. கடலோசை என்றேனோ பெரியநம்பியைப் போலே !

ஸ்ரீ மாறனேர்நம்பி என்பவர் தாழ்ந்த குலத்துதித்தவர். ஸ்ரீ ஆளவந்தார் சீடர்களுள் ஏற்றமுடையவர். ஒரு நாள் ஆளவந்தார் பராந்தகம் எனும் ஊர் வழியாக பாத யாத்திரை வரும்போது மாறனேர்நம்பி பசி மேலீட்டால் சேற்று நீரை கைப்பிடி எடுத்து உண்பது கண்டு ஆச்சர்யப்பட்டார். ''பசிதீர்க்க உணவும் நீரும் பகவான் படைத்திருக்க சேற்றைப் புசிப்பானேன்'' என்று கேட்டபோது இவர் சொன்னார் ''மண்சுவருக்கு மண்ணை இடுகிறேன்'', இதைக்கேட்ட ஸ்ரீ ஆளவந்தார் ''பிறந்த போதே சடவாயுவை முனிந்த மாறனாகிய சடகோபரோ இவர்'' என்றழைத்தார். அன்றுமுதல் மாறேனர்நம்பி எனப்பட்டார்.

ஸ்ரீ ஆளவந்தார் ஒரு நாள் எம்பெருமான் திருமுன்பு மனம் உருகி வழிபட்டுக் கொண்டிருக்கும்போது எம்பெருமான் அர்ச்சகமுகமாக ''நாம் உமக்கு வைகுந்த வாழ்வு தந்தோம்'' என்றார். ஸ்ரீ ஆளவந்தார் ''சுவாமி பிராகித தருமம் இன்னும் கொஞ்சம் அநுபவிக்க வேண்டி உளதே என்றார். அதற்கு எம்பெருமான் ''அதனை உம்முடைய சீடர்களில் யாருக்காவது கொடுத்துவிடும் என்றார்.

ஸ்ரீ ஆளவந்தார் தன்மடம் வந்து சீடர்களிடம் ''நம்பெருமான் நியமனப்படி நமது பிராகிருதகர்மத்தை உங்களில் யார் பெறத்தயாராக உள்ளீர்கள்'' என்று கேட்டார். எல்லா சீடர்களும் பேசாமலிருந்தார்கள். ஆனால் மாறனேர் நம்பியோ ''சுவாமி அந்தப் பிரசாதத்தை அடியேனுக்கு அனுக்கிரகிக்க வேண்டும்'' என்றார் ''அதனுடைய உபத்திரவம் தாங்க முடியாதே'' என்று ஸ்ரீ ஆளவந்தார் தயங்க ''அதுவே எனக்கு மகாப் பிரசாதம் ''என்றார் நம்பி.

ஸ்ரீ ஆளவந்தார் தனது வினையை நம்பியிடம் அனுபவிக்க விட்டார். அதனால் நம்பியின் திருமேனியில் வருத்தம் உண்டாயிற்று. தமக்குத் தளிகை செய்து கொள்ள முடியாத நிலையில் நம்பி வருந்தியபோது அந்தணரான பெரியநம்பி அவருக்கு அமுதருத்தி வந்தார். இவ்வாறு ஏற்றம் உடையவர் ஸ்ரீ மாறனேர்நம்பி.

ஸ்ரீ மாறனேர் நம்பி தன்னுடைய ஆச்சாரியரான அளவந்தாரை நினைத்துக்கொண்டிருக்கையில் பிரம்ம கபாலம் வெடித்து ஆசாரியன்திருவடி அடைந்தார். இவருக்குச்செய்ய வேண்டிய பத்துநாள் கடன்களைப் பெரிய நம்பிகள் செய்தார். திருவரங்கத்து ஸ்ரீ வைணவர் அனைவரும் தாழ்ந்த குலத்தவருக்குப் பெரியநம்பி சரம கைங்கர்யம் செய்ததைக் கண்டு ஜாதியின்றும் விலக்கி வைத்தனர்.

இச் செய்தியறிந்த ஸ்ரீராமாநுஜர் தன் குருவான பெரிய நம்பிகளைத் திருவடி பணிந்து ''சுவாமி மாறனேர் நம்பிக்கு சரம கைங்கர்யம் செய்வதற்கு என்னைப் போன்றவர்களைப் பணி கொள்ளாமல் தேவரீரே செய்தது மற்றவர் மனதைப் புண்படுத்துகிறதே'' என்றார், இதற்குப் பெரியநம்பி ''மாறனேர்நம்பியை! என்னநினைத்தீர்? மனத்தால் நாம் அந்திதொழுகைக்கு ஆளிட்டாலும் இடுவோம் இந்த காரியத்தில் மாத்திரம் ஒருவரை இடமாட்டோம். நான் பெருமாளைக் காட்டிலும் தருமரைக்காட்டிலும் பெரியவனல்லவே! மாறனேர் நம்பி ஜடாயுவையும் விதுரரையும் காட்டிலும் சிறியவரல்லவே; தசரதகுமாரன் ஜடாவுக்கும் தருமபுத்திரர். விதுரருக்கும் சரம கைங்கர்யம் செய்தது அவர்களுடைய நிலையை அறிந்தல்லவா! ஸ்ரீ நம்மாழ்வார் அருளிச்செய்த அடியார் மகிமை பற்றிப் பேசும். பயிலும்சுடரொளி 'நெடுமாற்கடிமை' போன்ற அருளிச் செயல்கள் கடலோசையோ'' என்று கேட்டார். ஸ்ரீராமாநுஜரும் சம்மதித்துப் பெரியநம்பியின் திருவுள்ளக் குறிப்பைக் கண்டு மகிழ்ந்து மற்றவருடைய மதிமயக்கத்தை நீக்கியருளினார்.

''அடியார்க்குச் செய்யவேண்டிய அன்பு பற்றிக் கற்றுணர்ந்து கற்றது பயன்படாமற் போயின் கடலோசை போன்றதாம்'' என்றார் பெரியநம்பிகள். அந்த உணர்வு தான் பெறவில்லையே என்கிறாள் திருக்கோளூர்ப் பெண் பிள்ளை.

## 70. சுற்றிக் கிடந்தேனோ திருமாலையாண்டான் போலே!

திருக்கோட்டியூர் நம்பிகள் திருவரங்கப் பெருமாளை சேவித்து விட்டு ஸ்ரீ ராமானுஜர் திருமடத்திற்கு. திருமாலையாண்டானுடன் எழுந்தருளினார். ஸ்ரீ ராமானுஜரிடம் ''நீர் திருமாலையாண்டானிடம் திருவாய்மொழிக்கு அர்த்தம் கேளும்'' என்று உரைத்தார். திருமாலையாண்டான் ஸ்ரீ ஆளவந்தாரிடம் அர்த்தம் கேட்டவர் என்ற காரணத்தினால்.

திருவாய்மொழி வியாக்யானம் திருமாலையாண்டான் அருளும்போது ஸ்ரீராமானுஜர் சில புதிய கருத்துக்களைத் தெரிவிப்பார். ஆனால் திருமாலையாண்டானோ தான் இதனை ஆளவந்தாரிடம் கேட்கவில்லையே என்று மறுதலிப்பார். இதனால் வியாக்யானம் சிலவேளை தடைப்பட்டது, ஸ்ரீராமானுஜர் சொன்ன வியாக்யான உலரயின் விளக்கங்களைக் கேட்டக் திருக்கோட்டியூர்நம்பிகள் ''நான் ஸ்ரீ ஆளவந்தார் சொல்ல இதனை முன்புகேட்டுள்ளோம். மேலும் ஆளவந்தார் திருவுள்ளக் குறிப்பு தவிர வேறெதுவும் ஸ்ரீராமானுஜர் அறியார்'' என்றார்.

திருமாலையாண்டான் ஒருதடவை திருவாய்மொழி வியாக்யானம் அருளிச் செய்யும்போது ஸ்ரீ ராமானுஜர் ''ஸ்ரீ ஆளவந்தார் இப்படி அருளிச்செய்யார்'' என்று விண்ணப்பித்தார். அதற்குஆண்டான்''நீர்ஆளவந்தாரைக் கண்ட தில்லையே. இப்படிச் சொல்லார் என்பதற்குச் சான்று ஏது'' என்றார். ஸ்ரீராமானுஜர் ''அடியேனுக்கும்

ஆளவந்தாருக்கும் ஏகலைவன் துரோணாசார்யர் போன்ற உறவு உண்டு'' என்றார். அப்போதுதான் ஆண்டானுக்கு ஸ்ரீராமாநுஜர் ஒரு திருவவதாரம் என்று புரிந்தது. அன்றுமுதல் ஸ்ரீ ராமாநுஜர் திருவாய்மொழிக்கு வியாக்யானம் அருள திருமாலையாண்டான் அவரையே சுற்றிக்கொண்டு படுகாடு கிடந்ததுமன்றி தனது குமாரரையும் ஸ்ரீராமாநுஜர் சீடராக்கினார்.

அப்படித் தான் ''திருமாலையாண்டான் போலே சுற்றிக்கிடந்தேனோ'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண் பிள்ளை.

## 71. சூளுறவு கொண்டேனோ திருக்கோட்டியூரார் போலே!

ஸ்ரீ ராமாநுஜர் பெரியநம்பிகளின் பரிந்துரையினால் திருக்கோட்டியூர் நம்பிகள் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி தனக்கு ரஹஸ்யார்த்தங்களை அறிவிக்கவேண்டும் எனப் பிரார்த்தித்தார். ஆனால் நம்பிகளோ வாளாவிருந்துவிட்டார் முதலில்.

ஒரு தடவை திருவரங்கப் பெருமானே, நம்பிகளிடம் ஸ்ரீராமாநுஜருக்கு உபதேசிக்குமாறு அர்ச்சகமுகமாக நியமித்தருளினார். அதன் பிறகே ஸ்ரீ இராமாநுஜரை திருக்கோட்டியூருக்கு அழைத்துச் சென்றார். நம்பிகள், 18 முறை இராமாநுஜரை நடப்பித்தருளி ஒருமாத காலம் விரதமிருக்கச் செய்து ''இவ்வார்த்தையே மற்றெவர்க்கும் சொல்லாமல் கேளும்'' என்று திருமந்த்ரார்த்தத்தை உபதேசித்தார். ''பரமரஹசியமாக வைத்துக் கொள்ளும் மற்றெவர்க்கும் சொலலாதீர்'' என்று சூளுறவுகொண்டு போக விடை கொடுத்தார்.

விசேஷ அர்த்தங்களை அறிந்து அறிவிக்க அடியேன் திருக்கோட்டியூரார் போலே சூளுறவு கொண்டேனோ என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 72. உயிராய பெற்றேனோ ஊமையைப் போலே!

ஒருநாள் ஸ்ரீராமநுஜர் ஒரு ஊமைக்குக் கருணை பாலிக்கக்கருதி தன் அருகில் அழைத்துத் தம்முடைய திருவடியைத்தலையில் வைத்து ரக்ஷகமாகக்காட்டியருளினார்.

யாருக்கும் கிட்டாத இவ்வாய்ப்பைக் கூரத்தாழ்வான் கதவின் இடுக்கின் வழியே கண்டு மூர்ச்சித்து, தெளிந்து ''ஐயோ! ஒன்றுமறியாது பிறந்தேனாகில் இப்பேறு எனக்கும் கிட்டியிருக்கும். கூரத்தாழ்வானாய் பிறந்து சாஸ்திரங்களைக்கற்றதாலன்றோ தம்முடைய திருமேனிவண்ணம் காட்டாமல் பிரபத்தியை உபதேசித்து விட்டார்'' என்றார். அந்தவாய்ப்பு தனக்குக்கிட்டாததால் கூரத்தாழ்வான் தம்மை வெறுத்துக்கொண்டார்.

ஆசாரியனுடைய கருணையினாலே இன்றியமையாததைப் பெறவில்லையே என்று ''உயிராய பெற்றேனோ ஊமையைப்போலே'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண் பிள்ளை.

## 73. உடம்பை வெறுத்தேனோ திருநறையூரரைப் போலே!

திருநறையூரார் சிறந்த திருமாலடியார். தினமும் திருக்கோயிலுக்குச் சென்று பெருமானைச் சேவிப்பது வழக்கம். பெருமானின் திருமேனிவண்ணம் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே என்னும் இயல்புடையவர்.

ஒருநாள் திருக்கோயிலில் வழிப்பட்டுக் கொண்டிருக்கும் போது திருக்கோயிலில் தீப்பற்றி எரிய ஆரம்பித்து என்ன முயன்றும் தீயை அணைக்க முடியவில்லை. நாலா பக்கமும் தீ சூழ்ந்து விட்டதால் அனைவரும் கோயிலை

விட்டு வெளியேறிவிட்டனர். திருநறையூராருக்குப் பெருமாளை விட்டுப் போக மனம் வராமல் பெருமாளை தீ சூழாமலிருக்க அவரை இறுக அணைத்துக் கொண்டார். தம் உயிரையும், உடலையும் வெறுத்து பகவானைக் காப்பாற்ற முற்பட்டார்.

திருநறையூரார் பெருமானைக் கட்டிப் பிடித்துக் கொள்ள அதைக்கண்ட அவர் மனைவியார் ஓடிவந்து அவரைக் கட்டிக்கொள்ள, அதைக்கண்ட அவர் குழந்தைகள் அவர்களைக்கட்டிக்கொள்ள இப்படியாக அவர் குடும்பமே பகவத் கைங்கர்யத்தில் உடலைச் சிறிதும் பேணாது ஈடுபட்டனர்.

இதுபோல அடியேன் "திருநறையூராரைப் போலே உடம்பை வெறுத்தேனோ" என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 74. என்னைப்போல் என்றேனோ உபரிசரனைப் போலே!

முன்னொரு காலத்தில் ரிஷிகளுக்கும், தேவர்களுக்கும் யாகத்தில் பயன்படுத்துவது மாவினால்செய்த யாகப் பசுவா, அல்லது உயிருடன் கூடிய ஆடா என்பதில் சந்தேகம் வந்தது. ரிஷிகள் மாவினாலான பசுவே போதும் என்றனர். தேவர்கள் உயிருடன் கூடிய ஆடே சாஸ்த்திர சம்மதம் என்றனர்.

இச்சந்தேகம் தீர்க்க உபரிசரன் என்பானை இருசாராரும் கேட்டனர். அவன் தேவர்கள் விருப்பப்படி தீர்ப்பளித்தான். அதனால் ரிஷிகள் சாபமிட்டனர். அவன் பாதாளத்தில் ஆழ்ந்து அசுரர்களால் துன்புறுத்தப்பட்டான். சதா இறைவன் தியானத்திலிருந்ததால் அசுரர்கள் தொல்லை அவனை ஒன்றும் செய்யவில்லை. எனவே அசுரர்கள் அந்தணர் வேடம்பூண்டு அவனிடம் வந்து நாத்திக

வாதம் பேசித்திருத்த முயன்றார்கள். உபசரனோ அவர்களையும் உத்தம பாகவதர்களாக நினைத்து அவர்களுக்கும் நல்லறிவு கொடுக்குமாறு இறைவனை வேண்டினான். அவர்களும் நல்லுணர்வு பெற்றனர்.

நாத்திகம்பேசி வருபவர்களையும் நன்மனத்தராய் திருத்தி உய்யக் கொண்டவன் உபரிசரன். இவ்வாறான நன்மனம் தனக்கு இல்லையே என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 75. யான் சிறியேன் என்றேனோ திருமலைநம்பியைப் போலே!

ஸ்ரீராமாநுஜர் திருவேங்கடமுடையானை வழிபட திருமலை எழுந்தருளினார். திருப்பரியட்டப் பாறை எனும் இடத்திலே சென்று கொண்டிருக்கும்போது பெரிய திருமலை நம்பிகள் எம்பெருமானுடைய தீர்த்தப் பிரசாதங்களை எடுத்துக்கொண்டு வந்து எதிரே எழுந்தருளி பிரசாதித்தார். ஸ்ரீராமாநுஜர் அவருடைய திருவடிகளில் பணிந்து 'ஸ்வாமி இவனுக்காகத் தாங்களே இவ்வளவு தூரம் எதிர்கொண்டு வரவேணுமா? யாரேனும் சிறியரை வரவிடலாகாதோ'' என்று விண்ணப்பம் செய்தார். திருமலை நம்பிகள் அருள் நகைசெய்து ''அப்பனே இத் திருவேங்கடபகுதியில் ஆராய்ந்து பார்த்ததில் இவனை விடச் சிறியவர்களைக் கண்டிலேன். எனவே இவனே வந்ததாயிற்று'' என்றார்.

அடியாருக்கு அடியராகும் தன்மையே ஸ்ரீ வைணவம் திருமலைநம்பி அதற்கு வடிவமானார். இதனையே ''திருமலை நம்பியைப்போலே யான் சிறியேனென்றேனோ'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 76. நீரில் குதித்தேனோ கணபுரத்தாளைப் போலே!

ஸ்ரீவைணவ ஆசாரியரான ஸ்ரீ நம்பிள்ளையும் ஸ்ரீபாதத்து முதலிகளும் திருவெள்ளரை திருத்தலம் வழிபட்டு திருவரங்கம் வரும்போது காவேரியில் பெருவெள்ளம ஏற்பட்டது. காவேரி கடக்க ஓடம் கிட்டாத காரணத்தால் தாளிக் கொடிகளினாலாகிய பரிசில் தயார் செய்து காவேரியைக் கடந்து கொண்டிருந்தனர்.

நடு ஆற்றில் பரிசில் சென்று கொண்டிருந்தபோது இருட்டிவிட்டது. மழை தூறத் துவங்கியது; நீரில் அமிழும் நிலை வந்தது பரிசில் விடுபவன் "ஒன்றிரண்டுபேர் நீரில் குதித்தால் மற்றையோர் கரையேறலாம் இல்லாவிடில் எல்லோரும் அமிழ்ந்து போவோம்" என்றான். நடுஆற்றில் பயத்தின் காரணமாக யாரும் குதிக்க விரும்பவில்லை, உத்தபமான மெய்யடியாளான கணபுரத்தாள் என்பவள் பரிசில் விடுபவனைப் பார்த்து "நீ உலகாசாரியராகத் திகழும் நம்பிள்ளையைப் பத்திரமாகக் கரை சேர்த்துவிடு. உனக்குப் புண்ணியம் கிட்டும்" எனக்கூறி இருட்டு வேளையில் ஆற்றிலே குதித்தாள். பின்னர் பரிசில் கரை சேர்ந்தது.

கரையேறிய ஸ்ரீ நம்பிள்ளை "நமக்காக ஒரு ஆத்துமா தட்டுப்பட்டுப் போயிற்றே" எனப் பல்கால் கதறினார். இவ்வார்த்தையைக்கேட்டு இரவு நேரமாகையாலும்,கரை தெரியாததாலும் குரல்வரும் திசை நோக்கி அம்மையார் கூறினாள் "சுவாமி கவலை வேண்டாம். அடியேன் காவேரியில் உள்ள ஒரு கோரைத் திட்டில் ஒதுங்கியுள்ளேன்" என்று. ஸ்ரீநம்பிள்ளை பரிசில்காரனை விட்டு கணபுரத்தாளை கரைக்கு அழைக்க, அம்மையார் ஆசாரியர் திருவடிகளில் விழ்ந்து "அடியேன் ஆற்றிலே ஒழுகிய போது

தாங்களே ஒரு கோரை மேடாய் வந்து காத்தருளினீர் கள்" என்று விண்ணப்பம் செய்தார்.

தமக்கு எல்லாவித உறவுமான ஆசாரியனைக் காப் பதற்காகத் தன் உயிரையும் தியாகம் செய்த கணபுரத் தாளைப் போலே இல்லையே என்கிறுள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 77. நீருகம் கொண்டெனோ காசிசிங்கனைப் போலே!

காசியில் சிங்கன் என்ற செல்வந்தன் இருந்தான். நான், எனது என்ற அகங்கார மமகாரங்களைக் கொண்ட வனாயிருந்தான்.

ஒருதடவை கங்கை கரைக்குச் சென்று அங்கிருப்பவர் களைப் பார்த்து "நான் நீச்சல் வல்லவன், பல தடவை கங்கையைச் சுற்றி வந்துள்ளேன்; கடலைக்கூடக் கலக்கும் வல்லமை எனக்குண்டு" என்று சொல்லியவாறே கங்கை யில் இறங்கினான். ஐந்தாறு தடவைச் சுற்றினான். கங்கையில் நீர்பெருக்கு அதிகரிக்கவே ஒருசுழலில் மாட்டிக்கொண்டான். தன்னால் ஆனவரை முயற்சித்தும் அவனால் கரைசேர இயலவில்லை.

நமது மனதில் மமதையும், அகங்காரமும் கொண்ட தால் இச்சுழலில் மாட்டி விட்டோமே: இனி நமக்குப் பரந்தாமன் தான் கதி எனக் கருதி "எம்பெருமானே இக் கட்டான சூழ்நிலையில் யானைக்கு அருளிய நீயே.அடியே னுக்கும் அருளவேண்டும்" என மனமுருகிப் பிரார்த்தித் தான் கருணைகொண்ட எம்பெருமான் திடீரென காற்றை உண்டாக்கி அலைமேல் அலையாக அடித்து வந்து சிங்க னைக் கரையேற்றினார்.

சிங்கன் கங்கையில் குதித்து தன்னுடைய ஆணவத்தால் ஆபத்துவந்தபோது ஆண்டவனை நினைந்து ஆலோசித்து வழிபட்டுக் கரை சேர்ந்தான். (ஊகம் - ஆலோசனை) அப்படி ''காசி சிங்கனைப் போலே நீருகம் கொண்டேனோ'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 78. வாக்கினால் வென்றேனோ பட்டரைப் போலே!

கூரத்தாழ்வான் திருமகனான பட்டர் ஐந்துவயதளவில் வீதியில் புழுதியளைந்து விளையாடிக் கொண்டிருந்தபோது ஸர்வஜ்ஞபட்டன் எனும் மாயாவாதி ஒருவன் வித்யாகர்வம் தோன்ற விருது, ஊர்தி பல்லக்கில் உலா வந்தான்.

பட்டர் இதனைப் பார்த்து ''ஆரடா இவன் உடையவர், ஆண்டான், ஜீயர், எம்பார் போன்றோர்களிருக்கும் இடத்தில் விருதூதி வருகின்றான்? இவன் அறிவை முன்னமே நானே ஆராய்ந்து விடுகிறேன் பார்'' என்று ஒருகையில் புழுதியை அள்ளிக்கொண்டு அவன் எதிரே போய் நின்றார். அவனைப்பார்த்து ''நீஎல்லாம் அறிந்தவனாகில் கையிலுள்ளது எவ்வளவு என்று சொன்னால் உன்னை மதிப்பேன்'' என்று சொன்னார் ஸர்வஜ்ஞபட்டன் ஒன்றும் தோன்றாது வாயடைத்து நின்றான். பட்டரோசிரித்து ''இது கைப்பிடி புழுதி என்று சொல்லத் தெரியாத உனக்கோ ஸர்வஜ்ஞன் என்றவிருது'' என்று சொன்னார். பட்டரின் மழலைச் சொல்லைக்கேட்ட அவன் ''யார் குழந்தை'' எனக் கேட்டான். அருகிலுள்ளோர் ஆழ்வான் புத்திரர் என்றனர்.'' அம்மம்ம! பறப்பதன் குஞ்சுக்கோ தவமும் என ஆச்சரியப்பட்டு தனது பல்லக்கிலேற்றி அவர் திருமளிகையில் விட்டுச் சென்றான்.

ஸ்ரீராமநுஜர் திருவாணைப்படி, மைசூரில் வாழ்ந்து வந்த வேதாந்தி மாதவாச்சாரியார் என்பவரை வாதில்

வென்று தனது சீடராக்கினார். இச்சீடரே நஞ்ஜீயர் எனப் படும் அருளாளர்; நஞ்ஜீயரால் ஸ்ரீ வைணவம் பொலிவுற்றது.

ஸ்ரீ வைணவம் தழைக்க அடியேன் "பட்டரைப் போலே வாக்கினால் வென்றேனோ" என்கிறாள் திருக் கோளூர்ப் பெண்பிள்ளை.

## 79. வாயிற் கைவிட்டேனோ எம்பாரைப் போலே !

ஸ்ரீராமாநுஜராலே ஆட்கொள்ளப் பெற்றகோவிந்தப் பட்டர் எம்பார், எனப்படுவார். பெரிய திருமலைநம்பி யிடம் ஸ்ரீ ராமாநுஜர் ஓராண்டுக் காலம் ராமாயணம் கேட்டுக்கொண்டவேளையில் நம்பி திருமாளிகையில் எம் பார் ஆற்றும் கைங்கர்யம் கண்டு மனம் நெகிழ்வார் ஸ்ரீ இராமாநுஜர்.

ஒருநாள் நந்தவனத்திற்கு எழுந்தருளினார் ஸ்ரீராமா நுஜர்; எம்பார், தாம் செய்துகொண்டிருந்த கைங்கர்யத் தை விட்டுவிட்டு ஒரு பாம்பின் வாயில் கையைவிட்டு மீளவும் நீராடி வருவதை ஸ்ரீராமாநுஜர் கண்டார். உட னே எம்பாரை நோக்கி "நீர் என்ன செய்து வந்தீர் இப் போது" என்றார் எம்பார்சுவாமி. ஒரு நாகப்பாம்புநாக்கை நீட்டிக்கொண்டு வாயை திறந்தவண்ணம் நேரவுபட்டுக் கொண்டிருந்தது. அடியேன் போய் அதன் வாயை பார்த் தளவில் அடிநாக்கில் ஒரு முள் தைத்திருக்கக் கண்டு அதனை வாங்கி விட்டுவந்தேன்" என்றார். உயிர்கள் மாட்டுஎம்பார் கொண்ட கருணைகண்டு உவந்தார் ஸ்ரீராமாநுஜர்.

இந்த வைபவத்தைக் குறிப்பிடுகிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

# 80. தோள் காட்டி வந்தேனோ பட்டரைப் போலே!

பட்டரின் பல்லக்கு சுமப்பவர்களில் ஒருவர் மரணப் படுக்கையிலிருந்தார். அவரது ஆத்மாவைக் கொண்டு போக யமதூதர்கள் வந்தனர். அதேசமயம் பட்டரின் தொண்டராகையால் விஷ்ணு தூதர்களும் அவருடைய ஆத்மாவை அழைத்துப்போக வந்தார்கள்.

யம தூதர்கள் : நீங்கள் ஏன் வந்தீர்கள். இல்லாத் மாவை நாங்களல்லவோ கொண்டு செல்லவேண்டும்.

விஷ்ணு தூதர்கள் ; அப்படியல்ல இவர் பட்டர் அடியார் ஆகையால் இவரைக் கொண்டு வருமாறு ஸ்ரீமந் நாராயணன் கட்டளை

யம தூதர்கள் : இவர் திருமாலடியாராயின் உடலில் திருஇலச்சினை இல்லையே;

இந்த வார்த்தையைக் கேட்ட அந்தத் தொண்டர் ''நாம்இத்தனை காலம்தொண்டுசெய்தும்பஞ்சசம்ஸ்காரம் செய்யப்பெற்றிலமே'' எனக்கலங்கி பட்டரை தரிசிக்க வேண்டுமென்று அருகிலிருந்தோர்களிடம் வேண்டினார்.

தொண்டர் விருப்பிற்கிணங்க பட்டர் வந்தார். ''சுவாமிஇத்தனை காலம் பணி செய்தும் பஞ்ச சம்ஸ்காரம் பெறாக பாவியாய் விட்டேன். யம தூதர்கள் அடிவேனை நரகிற்கு அழைக்கிறுர்களே'' எனத் தொண்டர் கதறினார்.

பட்டர் அவரை அமைதிப் படுத்தி ''உமக்குப் பஞ்ச சமஸ்காரம் சாதிக்க இப்போது அவகாசம் இல்லை. நீர் நமக்குப் பல்லக்குச் சுமந்த அடையாளமாக உமதுதோள் களில் திமில்கள் இருப்பதால் நீர் நம்மடியான் என்பதில்

சந்தேகமில்லை. உமக்கு பரமபதம் கிடைக்கும்'' என ஆசிர்வதித்தார்.

ஒரு உயிர் மரணப்படுக்கையில் கலங்கும் வேளையில் பட்டரைப் போலே ஆறுதல் கூறினேனோ என்று ''பட்டரைப்போலே தோள்காட்டி வந்தேனோ'' என்கிருள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

## 81. துறைவேறு செய்தேனோ பகவரைப் போலே!

திருவயிந்திரபுரத்தில் வில்லிபுத்தூர்ப் பகவர் என்பவர் வாழ்ந்து வந்தார். இவர் மற்றைய அன்பர்கள் நீராடும் துறையில் இறங்கி நீராடாமல் தனியாக ஒரு துறையில் இறங்கி நீராடி வருவது வழக்கம். ஒருநாள் அந்தணர்கள் சிலர் இதுகண்டு ''சுவாமி நாங்கள் எல்லோரும் நீராடும் துறையில் இறங்காமல் தனியாக தாங்கள் ஒரு துறையைத் தேர்ந்தெடுத்தது ஏன்'' என்றனர்.

அதற்கு வில்லிப்புத்தூர் பகவர் ''நீங்களெல்லாம் வர்ணாசிரமம்கைக்கொண்டவர்கள். நான்பூர்வாச்சாரியர்களின் அனுஷ்டானத்தைக்கடைப்பிடிக்கும் ஸ்ரீவைணவர்களின் அடியான். ஆதலால் உங்கள் துறைக்கு நான் வரவில்லை; நான் இழியும் துறை வேருகவே இருக்கட்டும்'' என்றார்.

''பண்டே உயிரனைத்தும் பங்கயத்தாள் நாயகற்கே
தொண்டா மெனத்தெளிந்த தூய்மனத்தர்க் குண்டோ
பலகற்றும் தம்முடம்பைப் பார்த்தபி மானிக்கும்
உலகத் தவரோ டுறவு''

என்ற ஞானஸரா பாசுரத்திற்குச் சான்ருகத் திகழ்ந்தார்.

''பசுவரைப்போலே துறைவேறு செய்தேனா'' என்கிறாள் திருக்கோளூர்ப் பெண்பிள்ளை.

81 மஹா வாக்கியங்களால் இவ்வாறு ஸ்ரீராமாஜரிடத்திலே திருக்கோளூர்ப் பெண்பிள்ளை விண்ணப்பம் செய்து ''இம்மாதிரியான ஞானம் வாய்ந்தோருள் ஒருத்தரின் ஞானத்தில் ஒரு அம்சமாவது அடியேனிடம் இருந்தால் அடியேன் திருக்கோளூரில் வசிக்கலாம்; ஞானமில்லாத எளியேன் எங்கிருந்து என்?'' என்று பரிவோடு விண்ணப்பித்தாள். ஸ்ரீராமாநுஜர் மிகவும் உகந்து கேட்டு ஞானப் பெண்பிள்ளையின் திருமாளிகையில் அமுது செய்து அருளினார்.

ஸ்ரீ:

# சின்னியம்மாள் ரகசியம்

சேத்துத் தாமரைக்கயத்திலே, வானமாமலை ஜீயர் நீராடிக் கொண்டிருந்தார். அப்போது அங்கு வந்த சின்னியம்மாள் என்ற வைணவப் பக்தி உள்ளம் நிறையப் பெற்ற பெண்ணொருத்தி, ஜீயர் சுவாமிகளுக்கு வணக்கம் செய்தாள். உடனே, சுவாமிகள் அப்பெண்ணைப் பார்த்து, விவரம் தெரிந்து கொள்ளவேண்டி, சில கேள்விகள் கேட்டார். கேட்ட கேள்விகளுக்கு வந்த பதில்கள் அனைத்தும் அப்பெண்ணின், ஆழ்ந்த வைணவப்பக்தியைக் காட்டியது.

| ஜீயர் சுவாமிகளின் கேள்வி : | பெண்ணின் பதில்': |
|---|---|
| உன் நாடு எது ? | திருவழுதி நாடு : |
| ஊர் எது ? | திருக்குருகூர் : |
| வீடு எது ? | 1) பண்டுடையான் வீடு : |
| குலம் எது ? | அச்சுதகுலம் : |
| வேதம் எது ? | திராவிட வேதம்: |
| கோத்திரம் எது ? | பராங்குச் கோத்திரம் : |
| சூத்திரம் எது ? | ஸ்ரீராமானுஜ சூத்திரம்: |

| | |
|---|---|
| 2) காரிகை யாது? | பரகால காரிகை : |
| குடி எது ? | அஞ்சுகுடி : |
| பந்துக்கள் யார் ? | ஆத்மபந்துக்கள் : |
| உறவார் யார் ? | 3) ஒட்ட உணர்ந்தவர்: |
| 4) உற்றார் யார் ? | உற்றதுஉன் அடியார்க்கு அடிமை : |
| தகப்பனார் யார் ? | தெய்வநாயகன் : |
| தாயார் யார் ? | ஸ்ரீ வரமங்கை : |
| புக்ககம் எவ்விடம் ? | வானமாமலை : |
| 5) பர்த்தா யார் ? | வரமங்கை மாமுனிவன் : |
| மாமனார் யார் ? | காந்தாபயந்தர் : |
| உத்தியோகம் எது ? | பாகவத கைங்கர்யம் : |
| அதனால் பிரயோசனம் யாது? | அதுவே பிரயோசனம் : |
| அதிகாரம் எது ? | 7) சர்வாதிகாரம் : |
| 8) நிஷ்டை எது ? | 9) பஞ்சமோபாயமே நிஷ்டை : |
| உபாயம் எது ? | 10) சரம உபாயம் : |
| அபிமானம் எது ? | பாகவத அபிமானம் : |
| பிரார்த்தனை என்ன ? | கைங்கர்யப் பிரார்த்தனை : |

சின்னியம்மாள் அளித்த இந்தப் பதில் மொழிகளினின்றும், அந்த அம்மையாரது வைணவப் பக்தியில் தோய்ந்த பக்குவம் பெற்ற உள்ளத்தைக் கண்டார், கேள்வி கேட்ட வானமாமலை ஜீயர்.

அம்மையாரது பண்பட்ட உள்ளம் கண்டு உகந்த ஜீயர் சுவாமிகள், அம்மையாருக்குப் பரமபதம் தந்து அருளினார்.

குறிப்பு :—1. பண்டே அடிமையாக் கொண்ட இறைவன்
2. வேத அங்கம்
3. அடியார்கள் - உறவினர்கள்
4. குடும்பத்தார்

5. கணவன் - (வரமங்கை முனிவன் ஆச்சாரியனே கணவன்)
6. அழகிய மணவாளன் என்பதற்குரிய வடமொழிப் பெயர்
7. எல்லாப் பாகவத கைங்கர்யத்துக்கும் தகுதி உடைமை
8. தியானம்
9. ஐந்து உபாயங்கள் : (பஞ்ச உபாயங்கள்) ஞானம், பக்தி, கர்மம், பிரபத்தி, ஆச்சாரிய அபிமானம்
10. சரம உபாயம் - இறுதி உபாயம்; ஆச்சாரிய அபிமானம்

இது, அருட்கவி அரங்க சீனிவாசன் அவர்கள் கொடுத்து உதவிய கருத்தைத் தழுவி எழுதப்பட்டது. நன்றிக்குரிய அவர், என்றும் வணக்கத்திற்குரியராவர்.

ஸ்ரீ:

நின்னருளாம் கதியன்றி மற்றொன்று இல்லேன் ;
நெடுங்காலம் பிழைசெய்த நிலை கழிந்தேன் ;
உன்னருளுக்கு இனிதாகும் நிலைஉ கந்தேன் ;
உன்சரணே சரண்என்றும் துணிவு பூண்டேன் ;
மன்னிருளாய் நின்றநிலை எனக்குத் தீர்த்து
வானவர்தம் வாழ்ச்சிதர வரித்தேன் உன்னை
இன்னருளால் இனிஎனக்குஓர் பரம்ஏற் றாமல்
என்திருமால் அடைக்கலம்கொள் என்னை நீயே !

-வேதாந்த தேசிகர்



## வைணவச் செல்வம் பற்றி இந்து நாளிதழில் வந்த மதிப்புரை :

VAINAVACHELVAM BY PULAVAR M. RAMASWAMI PUBLISHED BY IRASAI MU. RA. MANI VIZHA COMMITTEE—PONMUDI PRESS, AMMAPETAI, SALEM-3.

This book contains four parts which are important for the Vaishnavites. The first two parts present Narayana Kavacha and second part presents the aims of different kinds of organs of human beings to render services to Lord Sriman Narayana. These two parts comprise a Tamil translation of a great Vaishnava bakta called Chevvai Choodi who translated Sanskrit Bagavatham in Tamil language the other two parts contain 'Pasurappadi Ramayanam' of the great Periavachan Pillai and the sayings of a Vaishnavite woman-saint about her devotion to Vaishnava Sampradaya doctrines.

Unlike Saivism, Vaishnavism is not easy of access for the common man because it stands upon the importance of Sanskrit language directly or indirectly. Even the wonderful manipravala style which is the combination of Tamil and Sanskrit lives only within people who have Sanskrit knowledge. It is a surprise to note that Smt Ammani Ammal was an ordinary lady but she got Vaishnava truths from another revered lady called Pallikkottdathu Ammal (School teacher), who was chanting Alwars' Divyasookthis in the midst

of daily domestic duties. The special reference of this lady is that she is well versed in Desikaprabandam also. That shows how Vaishnavism reached the maasses through regional language. Thayar Mu. Ammani Ammal is a fine example for this phenomenon.

The third book contains Rahasyas of Vaishnava Sampradaya through a lady devotee of high order. A story runs as follows as recorded in this book.

When Sri Ramanuja entered the holy place of Tirukkollor of Pandya country, one lady was seen coming out of the city at the same time. Sri Ramanuja asked her in surprise how it was that she came out just as he was entering the place with great devotion. She replied in an indirect way that she was not worthy of living there because she was not following in the footsteps of the great devotees of eminent Baghavathas. In this connection, many puranic stories, guruparampara stories etc., are quoted in her speech. This is the quintessence of Vaishnavism. By reading these simple sayings (rahasyas) one is reminded of numerous thoughts of Vaishnavism. Periyavachan's Pasurappadi Ramayana is in simple—Tamil based on the essence of Alwars' experience of Ramavathara. It is a very short book which can be read by us daily as parayanam.

This book will be hjghly useful to all Vaishnavites.

*Agnihotram Ramanuja Thatachariar*

ஸ்ரீ:

## 31-3-87 'இந்து' நாளிதழில் வெளியிடப்பட்ட 'வைணவச் செல்வம்' மதிப்புரையின் தமிழாக்கம்.

இப்புத்தகம் வைணவர்களுக்கு முக்கியமான நான்கு பாகங்களைக் கொண்டது. முதல் இரண்டு பாகங்கள் நாராயண கவசத்தைப் பற்றி விளக்குகிறது. இரண்டாம் பகுதி, மனிதப் பிறவியின் பல்வேறு உறுப்புக்களின் நோக்கங்கள், அவை கடவுள் ஸ்ரீமன் நாராயணனுக்குச் சேவை செய்வதற்காக, என்பதைப் பற்றி, விளக்குகிறது. இவை இரண்டு பகுதிகளும் பெரிய வைணவ பக்தரான செவ்வைச் சூடுவார் அவர்களின், சம்ஸ்கிருத பாகவதத்தின் தமிழ் மொழி பெயர்ப்பைச் சார்ந்து அமைந்துள்ளது. மற்ற இரண்டு பகுதிகளும், பெரியவர் பெரிய வாச்சான்பிள்ளை அவர்கள் இயற்றிய பாசுரப்படி இராமாயணத்தையும், ஒரு சிறந்த வைணவ பக்தையின், வைணவ சம்ப்ரதாயக் கொள்கை ஈடுபாட்டின் காரணமாக, அதைப்பற்றி தெரிவித்த கருத்துக்களின் அடிப்படையில் அமைந்தது.

சைவ சமயத்தைப் போல, வைணவ சமயத்தை சாதாரண மனிதனால் எளிதில் புரிந்து கொள்ள முடியாது. ஏனெனில், அது நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ, சம்ஸ் கிருத மொழியின் இன்றியமையாத தன்மையைச் சார்ந்து அமைந்துள்ளது. தமிழ் சம்ஸ் கிருதம் ஆகிய இரு மொழிகளின் இணைப்பில் உருவான அற்புதமான ''மணிப்பிரவாள'' நடையோ இன்று சம்ஸ் கிருதம் அறிந்த அறிஞர்களிடையே மட்டும் நிலவி வருகிறது. திருமதி அம்மணி அம்மாள் என்ற சாதாரண பெண் மணி, பள்ளிக்கூடத்தம்மாள் (பள்ளி ஆசிரியை) என்று போற்றத் தக்க பெண்மணியிடமிருந்து, வைணவ சமய உண்மை

களை அறிந்து கொண்டு, தன்னுடைய தினசரி வீட்டு வேலைகளுக்கிடையில் ஆழ்வார்களின் திவ்யமான பாசுரங் களை இராகத்தோடு ஓதி வந்ததை அறியும் பொழுது வியக்கத்தக்கதாக உள்ளது.

இப்பெண்மணியைப் பற்றி சிறப்பாகக் கூறவேண்டு மானால், அவர்கள் தேசிகப் பிரபந்தத்திலும் கூட சிறந்த பயிற்சி பெற்றுள்ளார். இச்செய்தி எவ்வாறு, வைணவ சமயக் கோட்பாடுகள் பிராந்திய மொழியின் மூலமாக, பொதுமக்களை அடைகிறது என்பதைப் புலப்படுத்து கிறது. தாயார் மு. அம்மணி அம்மாள் அவர்கள் இவ் வரிய குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகத் திகழ்கிறார்.

உயர்ந்த வரிசையில் வைத்து போற்றத்தக்க பெண் பக்தையின் மூலமாக, வைணவ சம்பரதாயத்தின் இரகசி யங்களை மூன்றாவது பகுதி உள்ளடக்கிக் கொண்டுள்ளது. இப்புத்தகத்தில் கீழ்க்கண்டவாறு ஒரு கதை குறிப்பிடப் பட்டுள்ளது.

ஒரு சமயம் பாண்டிய நாட்டில் ''திருக்கோளூர்'' என்ற புனிதமான, தலத்திற்கு ஸ்ரீ இராமானுஜர் நுழை யும் போது, ஒரு பெண்மணி அதே நேரத்தில், அந்நகரத்தி லிருந்து வெளிவருவதைக் கண்டார். ஸ்ரீ இராமானுஜர் அப்பெண்மணியிடம், வியப்புடன், தான் பெரும் பக்தி யோடு (ஈடுபாட்டுள்ளத்துடன்) உள்ளே நுழைந்து கொண் டிருக்கும் போது, நீ வெளியேறுவது ஏன்?'' என்று கேட் டார். அதற்கு, அப்பெண்மணி மறைமுகமாக, தான் அவ்விடம் வசிப்பதற்குத்தகுதி வாய்ந்தவள் அல்ல என்றும், புகழ் பெற்ற பாகவதப் பெரும் பக்தர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி நடக்கவில்லை என்றும் பதில் அளித்தார். இது தொடர்பாக, அப்பெண் தன் பேச்சி னிடையே நிறைய புராணக்கதைகளையும், குரு பரம்பரை

பற்றிய பல கதைகளையும் மேற்கோள் காட்டி விளக்கு கிறார். வைணவக் கொள்கை பற்றிய வடித்தெடுத்த சாறாக இது விளங்குகிறது. இத்தகைய எளிய பழமொழி களைப் (இரகசியங்களை) படிப்பதன் மூலமாக ஒருவர் வைணவத் தொடர்பான எண்ணற்ற கருத்துக்களை நினைவுபடுத்திக் கொள்ளலாம், பெரிய வாச்சான்பிள்ளை அவர்களின் பாசுரப்படி இராமாயணம் எளியமையானது. இது, ஆழ்வார்களது அனுபவ அறிவின் சாறாக வழிந்த தமிழ்ப் பாசுரங்களில் தோன்றும் இராமாவதாரத்தை அடிப்படையாகக் கொண்டது. இது, நாம் தினமும் பாராயணம் செய்யும் வகையில் சிறிய புத்தகமாக உள்ளது.

வைணவப் பக்தர்களுக்கு இப் புத்தகம் பெரும் பயனுள்ளதாக விளங்கும்.

— "அக்னிஹோத்ரம் ராமானுஜ தாத்தாச்சாரியார்"






